*Kumaraṉ*

*Āram 11, muttu 14*

*November 23, 1933*

Record no. 313

REG. NO. M 1823. 16 பக்கங்கள். KUMARAN WEEKLY.

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 7-0-0

# குமரன்



வியாழன் தோறும் வெளிவரும்.

PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 11. | காரைக்குடி, ஸ்ரீமுக-ஸு கார்த்திகை-மீ 8-உ (23—11—33.) | முத்து 14.

## மலிந்துவரும் தொழில்கள்.

### ADVICE TO YOUNMEN.

M. சின்னையா செட்டியார்.

உலகத்தில் எல்லாத் தொழில்களும் எல்லா வியாபாரங்களும் ஸ்தம்பித்துப் போய்விட்டன. ஏற்றுமதியும் இறக்குமதியும் குறைந்துவிட்டன. தான்யங்களுக்கும் ஏனைய விளைபொருள்கட்கும் விலையில்லை' மிராசுதார்கள் குடியானவர்கள் வரிக்கட்ட முடியாதவர்களாய் கடனில் மூழ்கிக் கிடக்கிறார்கள். ஏழைமக்களுக்குக் கூலியகப்படவில்லை. தங்கமும் வெள்ளியும் நாடுகடத்தப் படுகின்றன. நாளுக்கு நாள் பணக்கஷ்டம் ஒருபுறம் அதிகரித்துக் கொண்டிருக்கிறது. இன்னும் எதிர்காலம் எப்படியாகுமோ தெரியவில்லை.

இந்த நிலைமையில் சில நிபுணர்கள் மனிதனை மனிதன் ஏமாற்றுவதை சரியான தொழிலென்றும் அதுதான் நிச்சயமாக இலாபம் தரக்கூடிய தொழிலென்றும் கண்டுபிடித்து விட்டார்கள். அவற்றுள்ளும் சிறப்புடையது

### இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள்.

உயிர் இன்ஷ்யூரன்ஸ், உடல் இன்ஷ்யூரன்ஸ், படிப்பு இன்ஷ்யூரன்ஸ், கல்யாண இன்ஷ்யூரன்ஸ், பிள்ளைபெறுவதற்கு இன்ஷ்யூரன்ஸ், இன்னும் மனிதவாழ்க்கையிலேற்படுகிற எல்லா சம்பவங்களுக்கும் இன்ஷ்யூரன்ஸ் என்று இன்ஷ்யூரன்ஸ் கம்பனிகள் நாளுக்கு நாள் உற்பத்தியாகிக் கொண்டேயிருக்கின்றன. அவை ஒவ்வொன்றும் ஆசைவார்த்தைகளை அளந்தளந்து சொட்டுகின்றன. அவை யெவ்வளவு தான் தற்புகழ்ச்சி செய்து கொண்டாலும், இந்த நேரத்தில் கம்பெனிகள் ஆரம்பிப்பதின் நோக்கமும் அதன் காரியங்களும் அறிந்து கொள்ள முடியாதனவன்று. ஆயினும் அண்டப் புரட்டர்களான ஏஜண்டுகளின் சாமார்த்தியத்தினாலும் உபத்திரவத்தினாலும் அந்த வலையிற்சிக்கிக் கொள்ளுகிற சாமான்ய ஜனங்கள் அதிகமாகவே யிருக்கின்றார்கள். தாக்ஷண்யத்துக்கு உட்படுகிறவர்களும் இல்லாமலில்லை. கொள் முதலில்லாத தொழில் ஆதலாற் கிடைத்தவரையிலும் நல்லது தான்; ஆகவே மலிந்துவருவதில் அதிசயமில்லை லிமிட்டட் கம்பெனிகளாதலால் எதிர்காலத்திலும் சிரமமில்லை. மாதாவுக்குச் சுகமிருந்தால் சிசுவுக்கும் ஆயுள்பல முண்டு. ஆதலால் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளைப் புதிது புதிதாக ஆரம்பிப்பவர்கள் இலாபத்தை மட்டும் கருதிவிடாமல் ஜீவகாருண்யத்தையும் சேர்த்துக் கருதிச் செய்யவேண்டும். இன்ஷ்யூரன்ஸ் செய்து கொள்ளுகிறவர்களும் வெளுத்த தெல்லாம் பால் என்று கருதிவிடாமல் கம்பனியைப்பற்றியும் கொஞ்சம் தெரிந்து கொண்டு செய்வது நல்லது. இரண்டாவது

### டிராமாக்கள்.

எங்கு பார்த்தாலும் டிராமாக்கள் மலிந்து விட்டன. கிராமங்கள் தோறும் டிராமாக் கொட்டகைகள் கட்டப்படுகின்றன. மாணவர்களெல்லாம் நடிகர்களாகக் கிளம்பி விட்டனர். ஆபீசர்களும் அதிகமாகவே கிளம்பிவிட்டனர். எல்லோரும் வருவாயை ஒரு தர்மத்துக் குபயோகிப்பதென்றே சொல்லிக் கொள்ளுகிறார்கள். பரம்பரை டிராமாக்களும் அதிகமாகவே காணப்படுகின்றன. டிக்கட்டுகள் கட்டாயவரியாக விற்கப்படுகின்றன. அதுவும் ஐந்து ரூபாய், மூன்று ரூபாய், இரண்டுரூபாய் என்று முரட்டுவரியாக இருக்கிறது. அம்மட்டில் நின்று விடுமா? பெட்ரோல் வேண்டாமா? சிகரெட் வேண்டாமா? மனது ரஸிக்க வேண்டாமா? வருவாயில்லாத நேரத்தில் ஏன் இந்தக் கேடென்று கேட்கிறேன்? அந்தநாடகக் கதைகளும், அதிற்பாடப்படுகிற பாட்டுகளும் சங்கீதத் திறமையும் சொல்லவேண்டியதில்லை. இதிலும் பெண் நடிகர்களுக்குக் கொஞ்சம் மோக்கியுண்டு. அதிற் பெரும்பாலும் எருமைகளே! பையன்களைப் பரலோகத்துக் கனுப்புவதற்கு தேவதூதர்களன்றி நாடகம் நடத்துவதற்கு யோக்யதையுடையனவன்று. காலம்போன கடைசியில் எவை யெவை மலியவேண்டுமோ அவையவை மலிந்து வருகின்றன போலும்! இனி மூன்றுவது,

### விகடப்பத்திரிகைகள்.

விகடப்பத்திரிகைகள் இப்போது ஏராளமாகக் கிளம்பிவிட்டன. வேலையில்லாத காலத்தில் விகடப்பத்திரிகை நடத்துவது நல்லது தான்: அவற்றுள்ளும் அரை குறையான பாஷையிலும் ஆபாசமான தமிழிலும் அர்த்தமில்லாத சொற்களாலும் அலங்கரிக்கப் பெற்றுவரும் பத்திரிகைகளே அதிகமாகக் காணப்படுகின்றன. ஹாஸ்யமுறையில் விஷயங்களை யெடுத்துக் கூறுவது ஒரு பெரிய சாமர்த்தியமென்பதை ஒருவரும் மறுக்க முடியாது. அப்படிக் கூறுவதை ஒரு இனிப்பான சுவையோடு பொதுஜனங்கள் படித்தறிந்து கொள்ளுவார்களென்பதிலும் சந்தேகமில்லை. ஆயினும் அர்த்தபுஷ்டியுடன் சுத்தமான தமிழ் நடையில் உபயோகமான விஷயங்களாகவும் இருக்க வேண்டும். அதனால் பாஷைக்கும் ஒரு அபிவிருத்தி யேற்படவேண்டும். கேவலம் கிராமியச்சொற்களை மலியவிட்டு சாரமற்ற கதைகளையும் சாரமற்ற சம்பாஷணைகளையும் எழுதித்தள்ளுவதிற் பயனில்லை. கல்வியறிவுள்ள பத்திராதிபர்கள் இதைக்கவனிக்க வேண்டுகிறேன். நான்காவது

### போட்டிப்பந்தயங்கள்.

சில பத்திரிகைகள் எழுத்துப்போட்டி கணக்குப் போட்டிப்பந்தயங்கள், அவற்றிற்கு ஆயிரக்கணக்கான ரூபாய்கள் பரிசு என்று கொட்டையெழுத்துகளில் விளம்பரம் செய்து வால்போஸ்டர்களும் ஒட்டி வர்களைக் கலக்குகின்றன. இந்தப் போட்டிக்கும் சில ஏமாந்த சோணகிரிகள் அகப்படுகின்றனர். வாதியும் ஜட்ஜும் ஒருவராக இருந்தால் தீர்ப்பு என்னவாகு மென்பதையறிந்து கொள்ள வேண்டாமா? விலைப்போகாத பத்திரிகைகளை விற்பனை செய்யவும் சந்தாச் சேர்க்கவும் இது ஒரு வழியென்பதைத் தெரிந்து கொள்ள வேண்டாமா? சுயமரியாதையில்லாத நாட்டில் பணங்கிடைத்தாற் போதுமென்பது தான் சித்தாந்தம் போலும்.

எனது பிரியமுள்ள இளைஞர்களே! வஞ்சகச் செயல்களுக்கு நீங்கள் ஆளாக வேண்டாம். நெருங்கிவந்தாலும் காலால் உதைத்துத் தள்ளிவிடுங்கள்.

## பொறுக்கு மணிகள்

சின்சிஞடி போலீஸ் கான்ஸ்டெபில் ஒருவர் இருமல் மருந்து சாப்பிட்டதி ஞல் நோய் அதிகப்பட்டு மூர்ச்சையாகி விழுந்து விட்டார்.

*　*　*

ஆஸ்திரியா தேச வாலிபர்களான மாக்ஸ்ரீஷ் என்பவரும் ஹெர்பர்ட் டிச்சி என்பவரும் மோட்டார் சைகில் ஏறி உலகவலம் செய்து வருகின்றனர்.

*　*　*

லண்டன் வாசியான பெயித் காட்டர் என்பவர் 43வது வயதில் அழகுப்போட்டியில் சேர்ந்திருக்கிறார். அவருக்கு 16,18,20,22 வயதான நான்கு புதல்விகளிருக்கின்றனர்.

*　*　*

அமெரிக்காவில் மூன்று இளைஞர்கள் 40 டன் கனமுள்ள ஒரு ரயில் எஞ்ஜின், தண்டவாளங்கள், சில இயந்திரங்களாகியவற்றைத் திருடினரெனக் குற்றம் சாட்டப்பட்டிருக்கின்றனர்.

*　*　*

கொலம்பியாவில் 105 வயதுடைய மடாஞ செலஸ்டிஞ என்னும் மாது வதிந்து வருகிறாள். அவளுக்கு 846 சந்ததியார்களிருக்கின்றார்கள். அவள் எல்லோரது பெயரையும் நன்ருக ஞாபகத்தில் வைத்திருக்கிறாள்.

*　*　*

அமெரிக்கா சென்ற வருடங்களைவிட அதிகமான சிகரட்டுகளைப் புகைக்கின்றது. ஆகஸ்டு மாதத்தில் செலவான சிகரட்டுகளின் எண் 11,18,3400000 1932ல் அதே மாதத்தில் செலவானவை 9559241000.

*　*　*

கான்ஸாஸ் நகரத்திலுள்ள E. M. கிம்பால் என்பவர் இறந்தபோது தமது அருமை நாயான "டூபி" என்பதற்கு 1400 பவுனை விட்டார். அவருடைய புதல்வனுக்குக் கிடைத்தது 2 பவுன் தான்.

*　*　*

ஆப்ரிக்காவில் இதுவரையிலும் உலகில் எப்பகுதியும் கண்டிராத அளவு மழைபெய்கிறது. அண்மையில் ஏற்பட்ட பஞ்சத்தின் காரணமாக சில சுதேசிகள் குழந்தைகளைத் தின்றுவிட்டதாகத் தெரிகிறது.

*　*　*

மிஸ் லொர்ரன் போமென் என்ற லாஸ் ஏஞ்சல்ஸ் 12 வயது சிறுமி விமானமோட்டுவதில் சிறந்து விளங்குகின்ருள் பன்முறை தனியாக அதிகதூரம் சென்று பலர் பிரமிக்கும்படிசெய்திருக்கிருள்.

*　*　*

சின்னுட்களுக்கு முன்பு புடாபெஸ்டு நகரை யொருவித சாம்பல் நிறப் பறக்கும் எறும்புகள் கடந்து சென்றன. சுமார் மூன்றுமணி நேரத்தில்தான் அவ்வெறும்புகள் கடந்துபோயின. அம்மூன்று மணிநேரமும் ஆகாயம் இருண்டு தோன்றிற்று.

*　*　*

ஸ்டவர் நதியில் மேய்ந்து கொண்டிருக்கும் போது விழுந்துவிட்ட ஒரு குதிரை 20 மைல் தூரம் நீந்தி 20 மணி நேரம் உயிரோடிருந்தது. பிறகு சில படகோட்டிகள் கடலிலிருந்து அதனைக் கரையேற்றினர். ஆற்று ஜலம்வழி அக்குதிரை நீந்தி நீந்திக் கடலையடைந்து விட்டது.

*　*　*

பொர்ஷியாவில் உலகில் அதிகமுயரமுள்ள ஒரு மனிதனிருக்கின்றான். அவன் உயரம் 11 அடி 3 அங்குலம்; அவன் பெயர் சியாகான் இபென் காஷ் மீர்கான் அவன் பிறந்தவூர் ஷிரஸ். சமீபத்தில் ஐரோப்பாவுக்குச் சென்றபோது பெய்ருட் துறைமுகத்தில் படகிலிருந்து கப்பலுக்கு ஏற்றமுடியாததுபற்றி கிரேன் என்ற இயந்திரத்தால் தூக்கி உயர்த்தினர்.

## ஸ்காட்லாந்தில் ராக்ஷச மிருகம்

பண்டைக்காலத்தில் பெரும் பெரும் பூதங்கள் வாழ்ந்து வந்ததாகக் கதைகளில் கேள்விப்படுகிறோம். அக் கதைகளைப் போல் ஐரோப்பா கண்டத்திலும் பூதங்களைப்பற்றிய கதைகள் பல சொல்லப்படுகின்றன. அக்கதைகளில் வரும் பூதங்கள் ஒரு காலத்தில் இருந்தன வென்று அவர்கள் நம்புகின்றனர். அந்நம்பிக்கையை மெய்ப்பிக்கின்ற பற்பல லட்சியங்களையும் அவர்கள் கண்டு பிடிக்கின்றனர். சமீபத்தில் 6 கோடி வருடங்கட்கு முன்பு வாழ்ந்துவந்ததான பெரிய பல்லியின் உடம்பை மண்ணுக்குள்ளிருந்து எடுத்தார்கள். அதன் நீளம் 30 அடியிருந்தது. சீனுவில் மண்ணிலிருந்து எடுக்கப்படுகின்ற முட்டைகளின் நீளம் மூன்றடிவரையிலு மிருக்கின்றன. இவை ராக் என்ற பிரமாண்டப் பக்ஷியின் முட்டையென்பதில் சந்தேகமில்லை. சில வருடங்கட்கு முன்பு தென் அமெரிக்காவிலிருந்து வெட்டியெடுக்கப்பட்ட ஒரு மிருகம் தற்போதிய யானையைப் போல பல மடங்கு பெரிதாயிருந்தது. வட அமெரிக்காவில் அலாஸ்கா தீவகற்பத்திலேரத்தில் அகப்பட்ட ஒரு பனிமலை கருமைநிறமாயிருப்பது பற்றி ஆச்சரியப்பட்ட ஜனங்கள் பலர் ஒன்று கூடி தைரியத்துடனணுகிப் பார்த்தபோது அது ஒரு பெரிய அபூர்வ ஜந்துவாயிருக்கக் கண்டனர். அந்தப் பிராணியின் உடற்கூறுகள் அந்நாட்டில் பாதுகாக்கப்பட்டிருக் கின்றன. இங்ஙனம் பல சான்றுகளைக் கொண்டு வெளிநாட்டார் பூதங்களுண்மையை மெய்யென்று கொள்கின்றார்கள். ஆனால் இந்தியரைப் போலஅவற்றிற்குத் தெய்வீகத் தன்மைகொடுப்பதில்லை.

சமீபத்தில் ஸ்காத்லாந்தில் ஒரு பெரிய மிருகத்தைக் கண்டுபிடித்தனர். அது இன்றும் லோச் நெஸ் என்ற ஏரியில் இருக்கின்றது. ஜனங்கள் கண்ணுக்கு [illegible] தென்படுவதில்லை. பிரஸ்தாப ஏரியில் ஒரு நொடியில் நீந்தி மறைந்து விடுகிறது. அது செல்வதைப் பார்த்தால் பெரியபடகு செல்வதைப் போலிருக்கும். அதன் நீளம் 30 அடி. அதன் கண்கள் பெரிய மோட்டார் லைட்போலிருக்கும். அது எப்போதும் தண்ணீரிலேயே வசிக்கின்றது. ஒரு நாள் கரையில் படுத்திருக்கக் கண்டனர். அந்த ஜந்துவின் உருவம் ஒரு மீனைப்போன்றதா, பல்லியைப் போன்றதா, வேறுவித பிராணியைப் பொன்றதா வென்று திட்டமாகக் கூறிவிட முடியாது. பலர் இது சரித்திரகாலத்திற்கு முந்திய பிராணிகளி லொன்ருயிருக்க வேண்டுமென்றும் எங்கோ தெரியாதவிடத்திலிருந்து தற்போது வெளிப்பட்டிருக்க வேண்டு மென்றும் அபிப்பிராயப்படுகிருர்கள். இம்மிருகம் இது வரையிலும் எவரையும் தொல்லை செய்ததில்லை. நீந்துவதில் மிகவும் திறமையுடையதா யிருந்தாலும் இயல்பில் மந்தமானதாகவும் பயந்ததாகவும் காணப்படுகிறது. அதன் முதுகில் இரண்டு கொம்புபோன்ற அமைப்புகள் காணப் படுகின்றன.

பிந்திவந்த செய்தியால் மேற் சொன்ன ராக்ஷச மிருகத்தைப் பற்றிய அதிகவிஷயங்கள் தெரிகின்றன. திரு. ரிச்சர்டு எம்ஹெர்ஸ்டு என்பவர் அம்மிருகத்தைப் பிடிக்கவேண்டு மென்கிறார். அவர் இம்மிருகம்போல பலவற்றை ஸ்காத்லந்து கடற்கரையில் பார்த்திருப்பதாகத் தெரிவிக்கிறார். பழக்கமுள்ள கப்பலோட்டிகளும் இம்மிருகத்தைப் பார்த்து அதிசயப்படுகின்றார் களில்லை. ஸர் ஆர்தர் ரோஸ்டன் இதுபோல பல மிருகங்களைப் பார்த்திருப்பதாகக் கூறுகிறார். அவர் ஒரு காலத்தில் ஐயர்லாந்தை விட்டுக் கடலில் சென்றபோது தண்ணீருக்கு மேலே 8 அடி தலையை தூக்கியிருக்கும் ஒரு பயங்கர மிருகத்தைக் கண்டாராம். முதலாவது "நான் அதனைக் கண்டபோது ஏதோ மரம் தானிப்படி இருக்கிறதென்று நினைத்து விட்டேன். பிற்பால் நெருங்கியபோது உயிருள்ள ஒரு தலை யென்று கண்டு கொண்டேன். அத் தலை அங்கு மிங்கும் அசைந்து கொண்டிருந்தது. அதற்குச் சிறிய காதுகளிருந்தன; ஆனால் கண்களை நான் காணவில்லை. அதன் கழுத்து 12 முதல் 14 அடி வரையிலும் நீளமிருந்தது. இதனைப் பார்த்தால் அம்மிருகத்தின் நீளம் மிக மிகப் பெரிதாயிருக்கு மென்றாகிக் கலாம். நாங்கள் கப்பலை அருகில் கொணர்ந்ததும் அது தண்ணீரில் மூழ்கி விட்டது. அப்பால் சிறிது நேரத்திற்குப் பிறகு தலையைத் தூக்கி எங்களைப் பார்த்துப் பின்னும் மூழ்கிச் சென்று விட்டது" என்கின்றார்.

—

### ஜெர்மனி—போலந்து உடன்பாடு

போலந்தின் புதிய மந்திரி மிஸ்டர் ஜோஸப் லிப்ஸ்கியுடன் ஹர் ஹிட்லர் நடத்திய சம்பாஷணையின் பயனாக, ஒரு முக்கியமான ஒப்பந்தம் இருவரும் செய்து கொள்ளத் தீர்மானித்திருக்கிறார்கள். மேற்படி சம்பாஷணை நடந்த சமயம் ஜெர்மன் அந்நிய நாட்டு மந்திரி வான்நியூராத்தும் கூடவிருந்தார். ஜெர்மனி போலந்து ஆகிய இரண்டையும் பாதிக்கிற பிரச்னைகளைப்பற்றி இரு தேச கவர்ன்மெண்டுகளும் நேரடியாக தங்களுக்குள்ளேயே விவாதித்து முடிவு செய்வதென்று ஏற்பாடாயிருக்கிறது. ஐரோப்பாவின் நிலையான சமாதானத்திற்கு அனுகுணமாக இரு தேசத்தாரும் பரஸ்பரம் எந்த விஷயத்தை யொட்டியும் பலாத்காரத்தில் பிரவேசிப்பதில்லை யென்று பேசி முடிவு செய்யப்பட்டிருக்கிறது.



## விகடத் துணுக்குகள்.

ஒருவன் பிச்சைக்காக வந்து வாசலில் நின்றான். வீட்டு சொந்தக்காரன் "நீ யார்?"

பிச்சைக்காரன்:—இப்படியே அலைந்து திரிபவன் ஐயா.

வீட்டுக்காரர்:—சரி, கொஞ்சத்தூரம் நடந்து காண்பி பார்ப்போம்.

அவன் நடந்தான்; வீட்டுக்காரர் கதவை மூடிக்கொண்டார்.

*　*　*

காதலன்:—கமலா நீ என்னை மணம் செய்து கொள்வாயா?

கமலா:—என் மனம்போல் நடப்பீர்களா?

காதலன்:—நடக்கிறேன்.

கமலா:—என் தாயார் என்னோடு இருக்கலாமா?

காதலன்:—இருக்கலாம்.

கமலா:—தந்தை?

காதலன்:—இருக்கலாம்.

கமலா:—நான் கேட்கும்போதெல்லாம் பணம் கொடுப்பீர்களா?

காதலன்:—கொடுக்கிறேன்.

கமலா:—இவ்வளவு அடிமைப்பட்ட கணவனெனக்கு வேண்டாம்,

காதலன்:—இல்லை கமலா; இத்தனையும் நீ கல்யாணம் செய்யட்டுமென்று தான் சொன்னேன்.

*　*　*

ஒரு பெண் ஒரு பால் பெட்டிக் கடையில் சென்று ஒரு பெட்டியை எடுத்துப் பார்த்தாள். திறக்கும் மார்க்கம் தெரியவில்லை. எனவே கடைக்காரனிடம்:—இதனைத் திறப்பதெப்படி?

கடைக்காரன்:—அதெல்லாம் பெட்டிக்குள் சொல்லப்பட்டிருக் கிறது.

*　*　*

தம் நாய்மீது அன்புள்ள ஒருவர்:—எங்கள் நாயை குடும்பத்தில்ஒருஅங்கம் போல் பார்க்கிறோம்.

கேட்பவர்:—குடும்பத்தில் எந்த அங்கத்தைப்போல?

*　*　*

கந்தன்:—(ஒரு தாசியுடன்) தினசரி காலையில் எழுந்திருந்ததும் முதல் முதலில் உன்னைத்தான் நினைக்கிறேன்.

தாசி:—முத்துவும் அப்படித்தான் சொல்கிறான்.

கந்தன்:—ஆனால் நான் அவன் எழுந்திருப்பதற்கு முன்பு எழுந்திருந்து விடுகிறேன்.

*　*　*

தாயார்:—ஏண்டி, மீனைநன்ருகக் கழுவினாயா?

புதல்வி:—ஏன் கழுவ வேண்டும்; அது தண்ணீரில் தானே கிடந்தது.

*　*　*

ஒருவர்:—தம்பி, ராமசாமி நன்னடக்கை யுடையவன்தானா?

மற்றவர்:—இன்னுமா சந்தேகம்! பலதடவை அவன் நன்னடத்தைக்குப் போலீசாரிடம் எழுதிக் கொடுத்து விட்டானே.

*　*　*

கமலா:—முட்டாளுக்கு முழங்காலில் புத்தி.

கோமளம்:—சரி, சரி, என் கணவனுக்கு மண்டையில் மூளையில்லை யென்கிறார்கள். ஒருகால் காலில் தானிருக்கிறதோ?

—





இன்பம் நிறைந்தது இவ்வுலகு. இன்பம் பெருக அன்பு இன்றியமையாதது. அன்பாம் இன்ப வெள்ளத்தை அள்ளிப்பருகி ஆனந்தமடைய ஆசை கொள்ளதார் யார்!!

உலகில் மக்களனைவரும் இன்பமாய் வாழவே ஆசை கொள்ளுவர். மக்களுலகம் மிகுதியும் நாடுவது இன்பமே. ஒருவன் செய்யும் காரியம் பிறருக்குத் தீமையாயிருப்பினும் அவனுக்கு அஃது இன்பம் பயப்பதாகவே யிருக்கும். இன்று உலகில் பலர் பலப்பல விதங்களில் இன்பமடைய விழைகின்றன ரெனினும் என்றும் அழியா இன்பம் தருவது இல்வாழ்வே யாகும். அதுவே மிகச்சிறந்த வாழ்வாமென பண்டைப் பெரியார் பலரும் கூறியிருக்கின்றனர். எனவே இல்வாழ்வுக் கேற்றதுணைவி இன்றேல் அஃது இன்பம் நல்கும் நல்வாழ்வாக மாட்டா. இருவர் கருத்தொருமித்து இன்பமாய் நடாத்தும் வாழ்வே இல்வாழ் வெனப்படும். ஒருவன் இச்சீரிய இன்பவாழ்க்கையில் ஆசை கொள்வானாயின், அவன் காதல்மணம் செய்து கொண்டாலன்றி வேறு எவ்வகையாலும் அவன் வாழ்நாள் முழுதும் இன்பமாய் வாழ இயலாது. வாழ்க்கை இன்பத்தின் காரணப் பொருளாய் விளங்கும் காதலின் உண்மைப்பண்பையும் பண்டைத் தமிழ் நூற்கள் தெள்ளிதில் விளக்கிக் காட்டுகின்றன. காதலென்பதுயாது? அதன் உயரிய பண்புயாது? அஃது தோன்றுவது எங்ஙனம்? எனின் காதலாவது வடிவும் பருவமும், குணமும், கல்வியும் ஒப்புமை யுடைய இருவரிடத்துத் தோன்றுவதாயும், அழிவும் குறைவும் அற்றதாயும், இணையிலா இன்பத்தை இருவர் மாட்டு மெழுப்புவதாயும், உயரிய குணங்களின் காரணப் பொருளாயும் விளங்குவ தென்பதேயாகும். அங்ஙனமே நந்தமிழ் நூற்களும் காதல் ஒருவர்மாட்டு நிகழ்வதன்றென்றும் இருவர் மாட்டும் ஒப்பநிகழ்வ தென்றும் உறுதியாய் விளக்குகின்றன.

கவி பாரதியாரும் "காதல், காதல், காதல் போயிற் சாதல், சாதல், சாதல்" என்றும், "காதலின்றி மானிடவாழ்வு சாதல் ஒக்கும்" எனவும் கூறியிருக்கிறார்.

## காதலும் மணமும்.

( O. M. சோமசுந்தரன். )

அவர் கூறியமொழி (கருத்து)க்குச் சான்றுபல இன்று நம் கண்முன் காண்கின்றோமன்றோ? அன்பர்களே! இன்று நடக்கும் காதலற்ற கல்யாணங்களைப் பாருங்கள், பாரதியாரின் உண்மை நன்கு விளங்கும்!

மணத்தைப்பற்றி ஆழ்ந்து சிந்திக்குமளவில் கேவலம் காதலற்ற மணமும் ஓர் மணமாகுமா? மணமற்ற புஷ்பத்திற்கும், காதலற்ற கல்யாணத்திற்கும் வித்தியாசமுண்டா? காதலின்றேல் சாத லொக்குமன்றோ? உலகில் மனிதனுக்கு முக்கியமாய் அவன் வாழ்வில் வேண்டப்படுவது யாது? அவன் கருத்துக்கியைந்து வாழ்வு நடாத்தும் காதலியன்றோ? இன்றேல் அவன் வாழ்வை எங்ஙனம் இன்பமாய் நடத்துதற்கியலும்? ஒருவன் உலகில் பிறந்தது முதல் இறக்குமளவும் இன்பமாய் வாழ விரும்புவானேயானால் அவன் கருதிய கருமம் கைகூடத்தக்க காதல் மணமே மிகச் சிறந்ததாகும்.

இன்று நம் நாட்டில் நந்தனவைசிய மரபில் நடக்கும் மணங்க ளெல்லாம் காதலற்ற கல்யாணங்களாகவே முடிகின்றன. மணமக்களிருவரும் ஒரு நாளேனும் இன்பமாய் இருந்திருப்பார்க ளென்பது குதிரைக்கொம்பேயாகும். மேலும் இவ்விருவரிடை எந்நாளும் விதண்டாவாதங்களும், வீண் வம்புகளும், காரியமற்ற சண்டைகளுமே நடந்து கொண்டிருக்கும். முடிவில் அவர்கள் அடைவது துன்பமே. அந்தோ! மணம் செய்து கொள்வது எதற்காக? இருவரும் வாழ்நாட்களை இன்பநாட்களாய்க் கழித்தானந்திப்ப தற்காகவா? அன்றி மேற்கூறியபடி நித்தியம் துன்பப்படுவதற்காகவா? அன்பர்களே! சிந்தியுங்கள்! எவனொருவனும் துன்பப்படுவதற்கு மணமுடித்துக் கொள்ளமாட்டான். அவன் கருதுவது இன்பமேயன்றி துன்பமன்று. காதலற்ற மணம் செய்து கொள்வதால் அவன்பல வழியிலும் துன்பமடைய நேருகிறது. இதற்குக் காரணகர்த்தர் யார் என்று பார்ப்போமானால் பாழும் பெற்றோர்களாகவே இருக்கின்றனர். அந்தோ! மக்களுக்கு அழியா இன்பத்தைத் தரும் காதற் கல்யாணங்களைச் செய்து வைக்கவேண்டிய பொறுப்பு அவர்களைச் சேர்ந்ததாயிருக்க அஃதின்றி அவர்கள் தத்தம் புதல்வர்கட்கு துன்பத்தையே தேடிவைக்கின்றனர்.

இல்லறம் என்பது ஓர் மாபெரும் ஆழியன்றோ? இவ்வாழியை நீந்திக் கடப்பவர்களன்றோ மணமக்கள்? இவ்வாழியை நீந்துவதற்கும் போதிய சத்தி இருந்தாலன்றோ முடியும்? அச்சக்திதான் காதல்! காதல்!! அன்பாம் இன்ப வெள்ளத்தைப் பெருகச் செய்யுங்காதல்!! பெற்றார்களே! இனியேனும் உங்கள் புதல்வர்கட்கு முடிக்கும் மணங்களை காதல் (மனமொத்த) மணங்களாய் முடிப்பீர்களா? இது உறுதியா? உங்கள் புதல்வர்கள் கருதும் காதலியையன்றோ நீங்கள் மணமுடித்து வைத்தல் வேண்டும்? உங்களுக்குப் பின் வாழ்க்கை நடத்தக்கூடியவர்கள் உங்கள் புதல்வர்களல்லவா? அவர்கள் நேரிய முறையில் செவ்விதாய் வாழ்க்கை நடத்த வேண்டுபவர்களல்லவா? அவர்களுக்கு இல்லற தருமத்தை அளிக்குங் கடமை உங்களைச்சார்ந்ததன்றோ? உங்கள் புதல்வர்கள் இன்பமாய் வாழ்வு நடாத்துவார்களேயானால் அஃது உங்களுக்கோர் பெருமையளிக்கு மல்லவா? உலகில் மனிதனுக்கு இன்பமளிப்பது யாது? பணமா? மணமா? பணம் இன்றிருந்து நாளை ஒழியும் தன்மையுடைய தன்றோ? மணம் அங்ஙனமன்று. மணமக்களிருவரும் மனமொன்றியிருந்து வாழ்வு நடத்துவதேயாகும். மணத்தின் மண (காற்ற)த் தையறியா நீங்கள் பணத்தைப் பெரிதாய் விரும்புவது அறிவுடைய செய்கையாகுமா? நாம் ஆறறிவுபடைத்த மனிதவர்க்கத்தைச் சேர்ந்தவர்களா? அன்றி ஐயறிவுபடைத்த விலங்கினங்களைச் சேர்ந்தவர்களா? விலங்கினங்களையன்றோ விலைகூறி விற்பர்? நாம் ஆற்றிவுபடைத்த மனிதவர்க்கத்திலும் விலைகூறுவதழகா? விலங்கினங்களைச் செய்வது போல் நாமும் செய்வோமா? பின் நமக்கும் விலங்கினங்களுக்குமுள்ள வித்தியாசந்தா னென்ன? எனவே நாம் மனிதவர்க்க மாகையால், அவைகளினின்றும் பகுத்தறிவென்ற பெரும் ஆஸ்தியை உடையவர் களாகையால் அவைகளில் நடந்து கொள்வதுபோன்று நம்மிலும் நடந்துகொள்வது அழகன்று. முதல் முதல் நாம் பணத்திற்குப் பெண் விற்குந் தொழிலை விட்டுவிட வேண்டும். அத்தொழில் அடியோடு ஒழியவேண்டும் எங்கும் காதல்மணமே கமழவேண்டும். காதல்மணமே மிகச்சிறந்தது. அதுவே மணமக்கள் இருவருக்கும் இன்பமளிப்பது. இன்றே நீங்கள் உங்கள் புதல்வர்கட்குக் காதல்மணம் செய்யக்கூசாது முன் வருவீர்களா?

வாழ்க காதல்! வாழ்க காதல்மணம்!

—

### சைக்கிளில் தம்பதிகள் யாத்திரை.

டாக்டர் ஓம் பிரகாஷ், ஸ்ரீமான் ராம்சங்கர், அவரது மனைவி ஸ்ரீமதி சகுந்தலா தேவி ஆகியவர்கள் நவம்பர் மாதம் 4-ந் தேதி டேராடூனிலிருந்து புறப்பட்டு சைக்கிளில் ஹரித்துவார், ரூர்க்கி, முஸபர்நகர், சதௌலி, மீரத் ஆகியவிடங்களைச் சுற்றிக் கொண்டு, ஹாபூர் வந்தனர். இவர்கள் ஆங்காங்குள்ளவர்களின் வாழ்க்கை நிலைமை அறியவும் குழந்தைகளுக்கு ஆரம்பக் கல்வியைக் கற்பிக்கும்படி வற்புறுத்தவும் பர்தா முறையை ஒழிக்கவும் ஹிந்துக்களின் முன்னேற்றத்தை நாடவும் இந்தப் பிரயாணம் செய்துவருவதாக அறிவித்தனர்.

# :: வைத்தியக் குறிப்புகள். ::

## பகலில் தூங்கலாமா ?.

பகலில் தூங்குவது ஆரோக்கியத்திற்கு அடுத்ததா, உண்மையில் இளைப்பாறுதலுக் கொப்பாகுமா வென்று கேட்கப்படுகிறது. இக்கேள்விக்கு விடை செடிகளின் வளர்ச்சியை நோக்கிக் கூறப்படுகிறது. வாட் என்ற தாவரசாஸ்திர நிபுணர் செடிகொடிகள் பகலைவிட இரவில்தான் நன்ருக வளர்ச்சிபெறுகின்றது என்று விளக்கிக் காண்பிக்கிருர். மூங்கில் செடி 24 மணி நேரத்தில் 23 அங்குலம் வளருமாளுலும் பகல் போதில் ஒரு மணி நேரத்தில் ஒரு அங்குலத்தின் மூன்றிலொரு பகுதிதான் வளர்கின்றது. இரவில் வளர்வது ஒரு மணிக்கு அரை அங்குலமாம்.

இதன் காரணம் பகலில் வெளிச்சத்தின் கீழ் உடம்பைப் போஷிக்கின்ற சக்தியில் பெரும் பாகம் நஷ்டமாகி விடுகின்றது. இரவில் அத்தகைய நஷ்டம் ஏற்படாத காரணத்தால் அத்தனையும் சேர்ந்து உடம்பை வளர்க்க உதவுகின்றன. இக் கூற்றை மேலும் சாதாரண இரவில் வளரும் செடியை மின்சார வெளிச்சத்தில் வைத்து விடுவதின் மூலமும் பரீட்சிக்கலாம்.

ஆகவே இரவில் தூங்குவது தான் உடம்புக்கு ஏற்றதென்பது விளங்குகின்ற தல்லவா? மேலும் இரவில் தான் இயற்கையாகத் தூக்கமும் வருகிறது:

பகலில் வெளிச்சத்தையும், ஜனச்சந்தடியையும், சத்தத்தையும் ஒழித்துத் தூங்குவதாளுல் பெரும்பான்மையும் இரவில் தூங்குவது போன்ற குணமேற்படும். இதோடு எந்த சமயத்திலாளுலும் தூக்கம் வரும் போது தூங்கிவிடுவது நன்மைபயப்பதாகும். எக்காரணம் பற்றியாவது இரவு நன்ருகத் தூங்கமுடிய வில்லையாளுல் பகலில் தூங்குவது அவசியமே.

—குட் ஹெல்த்.

## பெண்கள் உயரமாவது ஏன்?

சிகாகோ சர்ஜன்கள் கல்லூரியில் பிரசங்கம் செய்கையில் டாக்டர் சாரல்ஸ் ரீட் தற்காலத்து உணவே பெண்களை உயரமாக்குகிறது என்ருர். இன்றையப் பெண்ணின் சராசரி உயரம் 1893ம் வருடத்திய புருஷர்களின் சராசரி உயரத்தை விட 3 அங்குலம் ஜாஸ்தி. டாக்டர் ரீட் தற்போதிய உணவு முறை தசைகளை நீட்டி விடுகின்றதென்ருர். உடம்பு நீளமாவதால் தசை நோய்கள் பலபடியாகக் குறைகிறது என்பது அவரது கருத்து.

## சென்னை இந்திய வைத்திய மாணவர்.

கவர்ன்மெண்டு இந்தியன் வைத்திய பாடசாலையில், யூனனி, ஆயுர்வேத, சித்த வைத்திய முறைகளைப் பயின்றுவரும் மாணவர்களின் தொகை:—

| வருடம் | ஆயுர்வேதம் | சித்த | யுனனி |
|---|---|---|---|
| முதல் வருடம் | 75 | 30 | 12 |
| 2-வது வருடம் | 78 | 27 | 10 |
| 4-வது வருடம் | 53 | 17 | 4 |
| 3-வது வருடம் | 54 | 19 | 4 |

ஆயுர்வேத வைத்தியம் முறையே நான்கு வருடத்திலும் கற்ற மாணவர் தொகை 31,37,32,19 ஆம்.



## மலச்சிக்கலை ஒழியுங்கள்

ஒரு பெரிய தத்துவ சாஸ்திரி உயிர் என்பது வயிற்றுக்குள் செல்கின்ற ஆகாரம் பாகமாகி வெளியேவருவதாகும் என்கிருர். இதன் விளக்கம் என்னவென்ருல் வயிறு நன்ருகப் பசியெடுக்கவும், பசிவேளையில் உட்கொண்ட ஆகாரம் நன்கு ஜீரணித்துவிடக் கழிவுபொருட்கள் வெளியே வந்துவிடவும் செய்வதுதான் ஆரோக்கியத்திற்குத் தகுந்த லக்ஷணமென்பதாகும். மலச்சிக்கலுள்ள உதரம் (வயிறு) நன்கு பயிற்சிபெருதது என்று துணிந்து கூறிவிடலாம். அந்த வயிறு ஜீரணமாகாத கழிவுபொருட்களை வெளியே தள்ளிவிடுவதாகிய இயற்கையைவிட்டு நீங்கியிருக்கின்றது என்று கொள்ளவேண்டும். வயிற்றில் எவ்விதமேனும் உணர்ச்சி குன்றும் போதுதான் மலச்சிக்கல் ஏற்படுகின்றது. அவ்வித நிலைமை ஏற்படும்போது வயிற்றுக்குத் திரும்பவும் பயிற்சி கொடுக்க வேண்டும்: ஆனல் பலர் அவ்வாறு செய்யாது வாளாவிருந்துவிடுகின்றனர்.

மலச் சிக்கலுக்குச் சிலர் வயிறிளக்கும் மருந்தை உட்கொள்ளுகிருர்கள். அது தற்கால சாந்தியாக விருந்தாலும் பிறகு அதிகம் கடுமையான இளக்க மருந்து சாப்பிட வேண்டியவர்களாகி விடுகின்ருர்கள். அவ்வாறு கடுமையான மருந்துட்கொள்ளுவது கஷ்டமாகத் தோற்றுவதோடு மலச்சிக்கலையும் பலப்படுத்தி விடும். ஆகவே மலச்சிக்கலை யொழிக்கச் சிறந்த வழி இயற்கை முறைகளாம்.

மலச் சிக்கலுக்கு மேலானதும் நீண்டநாளாக உபயோகத்திலிருந்து வருகின்றதுமாகிய மருந்து உப்பாகும். இது விலையில் சரசமானதென்பதோடு பச்சிலை போன்ற மருந்துகளால் ஏற்படும் கெடுதிகளைப் பெற்றிருப்பதுமில்லை. மலச்சிக்கலுடையவர்கள் காலையில் ஒரு குவார்ட் சுத்த ஜலத்தில் இரண்டு சிறு கரண்டி நிறைந்த உப்பைக்கரைத்து "வெறும் வயிற்றில்" சாப்பிடவேண்டும். அந்த ஜலம் வயிற்றுக்குள் போனதும் இரண்டு மூன்று தரம் வயிற்றை அழுத்துகிறது. இவ்வழுத்தமே வயிற்றின் இயற்கை. அது பிற்பால் [illegible] கொண்டிருக்கும். அப்போது நோய்குணமாகி வயிறு பயிற்சி பெற்றுவிட்டது என்னலாம்.

கடந்த மகாயுத்தத்தின்போது ஒரு பிரஞ்சு மெடிகல் உத்தியோகஸ்தர் மலபந்தத்துக்கு வெறும் ஆரஞ்சுப்பழத் தோட்டை உபயோகித்தார். அவர் அதனைத்தயாரித்த முறையாவது:-ஆரஞ்சுத்தொலியை அரை மணிநேரம் ஒரு "பைண்ட்" தண்ணீரில் நன்ருகவேகவைத்தார். பிறகு அதனை இன்னும் அரைமணிநேரம் கொஞ்சம் திதிப்புக் கலந்த தண்ணீரில் வேகவைத்து உலர்த்தினர். இதுதான் அம்மருந்து செய்முறை. ஒரு மனிதனுக்கு ஒரு ஆரஞ்சுப் பழத்தோடு போதுமானது. அரஞ்சுப்பழத்தோடு வயிற்றை நிதான நிலைக்குக் கொண்டுவருவதோடு பித்தத்தையும் தணித்து நிற்கும்.

மலபந்தத்திற்கு மருந்தைத் தவிர செயற்கைமுறை சிலவுண்டு. சிலவருடங்கட்கு முன்பு டாக்டர் சாலி வெடிகுண்டு முறையை உபயோகித்தார். அதாவது 3 முதல் 5 வரை ராத்தல் கனமுள்ள ஒரு வெடி குண்டை (பிரங்கியின் குண்டை) அடிவயிற்றில் வலது புறமிருந்து இடதுபுறமாக உருட்டினர். இவ்வாறு காலையில் படுக்கையை விட்டெழுந்திருக்கு முன்பு தினசரி முப்பது முதல் 60 தரம்வரையிலும் செய்தால் மலச்சிக்கல் வாசியாகும்

இதைவிடச்சிறந்தமுறை உடற்பயிற்சியாகும். இம்முறையில் பலமாதிரியுண்டு. அவற்றில் ஒன்று:-நேராக நின்றுகொண்டு இரு கைகளாலும் வலது காலைப்பிடித்துக் கொண்டு கால் மூட்டினல் வயிற்றை அழுத்தவேண்டும். பிறகு காலை தாழ்த்தி மீண்டும் இங்ஙனம் சிலதரம் செய்வது மிகுந்த குணத்தைத்தரும். மற்ருென்று உடம்பை முற்புறம் வளைத்து இருகைகளையும் தொடைகளுக்குள் ஒழுங்காக வைக்கவேண்டும். இந்தப் பயிற்சியில் உடம்பை எவ்வளவுதூரம் வளைக்கமுடியுமோ அவ்வளவுதூரம் வளைப்பதுநலம். மற்ருெரு பயிற்சி:—இரு கைகளையும் வயிற்றிலூன்றிக்கொண்டு ஓரமாகச்சாய்ந்து சாய்ந்து உடம்பைத் தூக்கவேண்டும். பிறகு வலதுகையை எடுத்துவிட்டு முன்னும் பின்னுமாக வளையவேண்டும்.

அடுத்தபடியாக மலபந்தத்திற்குக் குறிப்பிடவேண்டுவது உணவாகும். கோதுமை, ரை, உழுந்து, ஓட், கொள்ளு முதலியவை தானியங்களில் விசேஷமானவை. காய்கறிகளில் கீரைகள்.........பாசிப்பயிறு முதலியவை ஏற்றவைகளாம். பழங்களில் ஆபிள் மிக சிறந்தது. பீச், பீயர் முதலியவைகளும் அத்திப்பழங்கள், பேரீச்சம்பழம் கொடிமுந்திரிப்பழம் ஆகியவைகளும் மலபந்தத்திற்குச் சிறந்தவைகளாம்.

பெரும்பான்மையும் ஜனங்கள் மனே நிலைமையும் மலச்சிக்கலுக்குக் காரணமென்கின்றனர். சுறுசுறுப்பு முற்சாகமு முள்ள மனமுடையவர் வயிற்றுக் கோளாறினல் துன்புறமாட்டார்கள்.

பொதுவாக மலபந்தத்திற்கு மருந்து சாப்பிடுவதென்பது தவறு. விளக்கெண்ணெய் போன்றவை தாற்காலிகமாகத்தான் குணம் செய்யும். அப்பால் சிலகால் வயிற்றையே கெடுத்து விடுவதுண்டு. வயிற்றைக் கெடுப்பதை விட மலச்சிக்கலை வைத்திருப்பது சிரேஷ்டம். நோயாளிகள் மருந்து முறைகளை விட உடற்பயிற்சியினல் குணம் செய்யும் இயற்கை முறைகள் சிறந்தவை யென்பதையுணரவேண்டும்.

## சங்கீதத்தால் அதிகம்பால்.

"பசுக்கள் தனிமையை வெறுக்கின்றன. அவைகட்கு சங்கீதத்தில் விருப்பமதிகம். உணர்ச்சியுள்ள பாட்டைக்கேட்டால் அவை அதிகமாகப் பால் சொரிகின்றன" என்று அமெரிக்காவைச் சுற்றிப்பார்த்து விட்டு இங்கிலாந்துக்கு வந்த மிஸ்டர் ஆர். கௌட்பிளவர் என்பவர் கூறினர். அமெரிக்காவில் சங்கீதம் பால் பண்ணைகளில் அதிகமாக உபயோகிக்கப் படுகின்றன. "நான் அமெரிக்காவில் கண்ட அதிகம் பால் சொரியும் பசு சீட்டில் என்ற விடத்திலிருக்கிறது. இப்பசு ரேடியோ சங்கீதத்தைக் கேட்டுவருகிறது. ஆகவே பசுக்களைத் தாமாகவிட்டு அதிகமான சங்கீதம் கேட்கும்படி செய்தால் ஏராளமான பால் சுரக்கும் என்று கூறலாம்." என்ற திரு. கௌட் பிளவர் கூறினர்.

## ரம்பத்தூள் கூந்தலை வளர்க்கும்.

ரம்பத்தூள் வழுக்கைத்தலையைப் போக்கும் சிறந்த ஔஷதமென்று மிஸ்டர் ஆண்டர் காக்னன் என்பவர் கூறுகிருர். அவர் பலவருடங்களாக ரம்பச்சாலை நிறுவி தொழில் நடத்திவருகிருர். 90 வயது வரையிலும் அவர் அச்சாலையில் வேலை பார்த்துமிருக்கிருர். அவருடைய தலைமயிர் செழித்திருந்தன. அவர் யாராவது ரம்பமறுப்பவர்கள் வழுக்கைத் தலையுடனிருக்கின்ருர்களாவென்று வினவுகிருர்.

## வாசனையின் சாரீர குணம்.

பண்டைக்காலம் முதற்கொண்டு கீழ் நாடுகளில் வாசனைப் பொருட்கள் உபயோகிப்பது வழக்கமாகி விட்டது. பூஜைக்கும். கடவுள் சன்னதிகட்கும் வாசனைப் பொருட்கள் உபயோகிப்பது சர்வசாதாரணம். வாசனைப் பொருட்கள் சில சில நோய்கட்குத் தகுந்த ஔஷதங்களாம். லவண்டர் தண்ணீரை உபயோகித்தால் தலைவலியையும் தலைமயக்கத்தையும் தீர்த்துவிடலாம். ரோஸ் அத்தருக்கும் இதுபோன்ற சக்தியுண்டு. பைன் வாசனையால் தூக்கமின்மையை பரிகரித்துக் கொள்ளலாம். நோய்வாய்ப் பட்டிருக்கும் குழந்தைகட்கு Sweet pea, Lily (ஒருவித கூவிளம்) பூவின் மணம் மிகுந்த குணம் செய்யும். இவ்வாறு நோக்கினல் பலவித வாசனைப் பொருட்களைத் தயாரித்து விற்கிறவர்களைக் குறை சொல்லமுடியாது.

—சோப் வியாபாரப் பத்திரிகை

## சென்னை ஹோட்டல்காரர் களுக்கு போலீஸ் உத்தரவு.

சென்னையிலுள்ள ஓட்டல்களிலும் போஜன சாலைகளிலும் வெளியூரிலிருந்து சாப்பிடுவதற்கும், தங்குவதற்கும், யாராவது வந்தால் அவர்கள் பெயர்களை ஒரு புஸ்தகத்தில் பதிவு செய்து அவர்கள் ஊர் பெயர், ஜீவனம், சென்னைக்கு எதற்காக வந்தார்கள், எவ்வளவு நாள் சென்னையில் தங்குவார்கள் என்ற தகவல்களைக் குறித்து புதிதாக வந்தவர்களின் கையெழுத்து வாங்கி சென்னை நகரப் போலீஸ் கமிஷனர் இலாகா டிப்டி கமிஷனருக்கு தினசரி ரிப்போர்ட்டு அனுப்பிக்கும்படி போலீஸ் கமிஷனர் எல்லா சாப்பாட்டு ஓட்டல்காரர்களுக்கும் உத்திரவு பிறப்பித்திருக்கிருர். 15ந் தேதி முதல் இந்த உத்திரவு அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது.







# பெண்கள் ஆடவரினும் சிறந்தவரன்ருே?

திருவாளர் பிரித்வி சந்த் பாத்யா என்பவர் "விடோஸ்காஸ்" என்ற ஆங்கிலப் பத்திரிகையில் பெண்கள் ஆடவர்களைக் காட்டிலும் மேலானவர்கள் என்ற தலைப்பின்கீழ் அடியில் வருமாறு எழுதுகிருர்:—

இன்று இந்தியாமுழுதும் பெண்களுரிமையைப்பற்றியும் விடுதலையைப்பற்றியும் தீவிரமாக வாதம்செய்து கொண்டிருக்கும்போது ஒருசாரார் பெண்கள் ஆண்களைவிட எவ்வழியிலும் கீழானவர்கள் என்று கூச்சல்போடுகிருர்கள். அதே பொழுதில் வேருெரு சாரார் பெண்களும் ஆண்களும் சமமான இயற்கையையுடையவர்கள் என்கின்றனர். உண்மையை உய்த்துணருமிடத்து இவ்விருசாராரும் உண்மையை மறந்துவிட்டார்கள் என்று சொல்லலாம். உலகிலுள்ள பெரும்பான்மையான மதங்கள் ஆடவரைவிடப் பெண்டிர் சிறந்தவர்கள் என்பதை நன்கு விளக்கியுள்ளன. உண்மையில் பெண்கள் ஆடவரினும் மேம்பட்டிருந்தார்கள், இருக்கின்ருர்கள், இருந்து வரவும் செய்வார்கள்.

## சமதோற்றம்.

நாம் எப்பொழுதுமே ஆடவன் தான் மேலான பிறப்புடையவன் என்றும் பெண்கள் அப்படியல்ல வென்றும் உறுதிப்படுத்திவிடக் கூடாது. பைபில் (விவிலியம்) படி நோக்கினல் ஆடவர் பெண்டிராகிய இருவரும் ஒரேவிதத் தோற்றமுடையவர் என்பதைக் காணலாம். எப்படி யென்ருல் விவிலியத்தில் "நாம் நமது உருவத்தில் நம் வடிவத்தில்-மனிதர்களைப் படைப்போம்; அம்மனிதர்கட்குக் கடலிலுள்ள மச்சங்கள் மீதும் (பிறவற்றின் மீதும்) ஆதிக்கமிருக்க. ஆகவே கடவுள் அவருடைய சொந்த வடிவத்தில் மனிதனைப்படைத்தார். அவருடைய சொந்த உருவத்தில் ஆடவரையும் பெண்டிரையும் படைத்தார்" Genesis I 26—27.

இதேபோல புனித கொரானும் ஸ்திரீயும் புருஷனும் சிறந்த பிறப்புடையவர்கள் என்பதனைக் காட்டுகிறது. மகாபாரதத்தில் பிரமாவானவர் உலகில் முதலாவது பெண்ணைப் படைத்தார் என்றும், அப்பெண்ணை அழகில் குறையற்றவளாகவும் உலகிலுள்ள இதரப் பிராணிகட் கில்லாத மேலான குணங்களுடனும் நிர்மித்தார் என்றும் சொல்கிருர். (மனு அத்தியாயம் 5—130) இன்னும் பிரம்மா சொல்கிருர் "ஒரு பெண்ணின் வாய், பரிசுத்தமாக ஓடிக்கொண்டிருக்கும் நீரோடையைப் போலவும் சூரிய கிரணங்களைப் போலவும் பரிசுத்தமானதாம்"

## பெண்கட்குக் கவுரவம்.

ஒவ்வொரு மதமும் பெண்களைக் கவுரவிக்கும்படிப் பணிக்கின்றது: கிருஸ்துமதம் "வயதுக்கு மூத்த பெண்களைத் தாய் போல் பாவிக்க. I. Tim 52)" என்கின்றது. கொரானில் அல்நிசா அத்தியாயத்தில் முதலாவது பாட்டு "அல்லாவிடம் பக்தி காண்பிக்க; பெண்களையும் கவுரவிக்க. அல்லாமூலம் நீங்கள் ஒருவருக் கொருவர் நேசியுங்கள்" என்று முழங்குகின்றது. ஆகவே கொரான்பெண்களைகடவுளுக்கடுத்தபடியாக வைக்கிறது என்னலாம். கொரானில் மற்ருேரிடத்தில் மகமது நபி 'மிகவும் நல்லவனுன மனிதனே பெண்ணைப் போற்றுகின்ருன். மிகவும் கெட்டவனே பெண்ணை இகழ்கின்ருன்" என்று மொழிகின்ருர் இதிலிருந்து பெண்களை நடத்தும் முறையினல் ஒரு புருஷன் நல்லவனு அன்றிக் கெட்டவனு வென்பதைக் கண்டுகொள்ளலா மென்று தெரிகிறது.

ஒரு பெண்ணைப்பற்றி இகழ்ந்து பேசுவது கூடவும் பாவமென்று கொள்ளப்படுகிறது. சுரா 24—4ல் ஒரு கற்புடைய பெண்ணை எவனுவது அவதூருகப் பேசிப் பிறகு நான்கு சாக்ஷிகளையும் கொண்டு வராமலிருப்பானுனல் அத்தகையவனுக்கு 30 சவுக்கடி கொடுக்க. அதோடு அவனை வாணுள் முழுதும் நம்பாமலிருக்க" என்று எழுதப்பட்டிருக்கிறது.

ஹிந்துமதக் கிரந்தங்களை எடுத்து நோக்கினல் பெண்களை கவுரவிப்பதற்கு ஆயிரக்கணக்கான சான்றுகளைக் காணலாம். மனுவென்ற பெரிய ஹிந்துச்சட்ட நிருபண் "ஒரு பெண்ணை அழைக்க வேண்டுபவன் அவளை சகோதரி என்று சொல்ல வேண்டும். ஒரு வயோதிகரோ, அர்ச்சகரோ, ராஜகுமாரரோ வந்தால் எவ்வாறு வழிவிட்டுக் கொடுப்போமோ அதே போல நாம் நீங்கிப் பெண்கட்குப்பாதை கொடுக்கவேண்டும்" என்று சொல்கிருர். அப்பால் உபசாரம் செய்யும் மார்க்கங்களைக் கூறுமிடத்தில் மனுவானவர் "கருப்பஸ்திரீகட்கும், புதுப் பெண்கட்கும், தாய்மார்கட்கும் மற்ற விருந்தினர் உண்பதற்கு முன்னமேயே அன்னமளித்திடுக" என்கின்ருர். அதோடு ஒரு பெண் பகைவனுருவனின் வீட்டைச் சார்ந்தவளெனினும் அவளையும் மதித்துநடக்க என்பது அவருடைய கட்டளை.

## மனைவியர் பொக்கிஷமே.

எல்லா மதங்களும் மனைவியர் கணவர்கட்கு எவ்வளவு சிறந்த பொக்கிஷ மென்பதனை வற்புறுத்துகின்றன. கிருஸ்துமதத்தை நோக்கினல் I Cor. 7ல் "பெண், புருஷனுடைய புகழ்" என்று கூறப்பட்டிருப்பதையும் Prov. 12,4ல் "ஒரு கற்புடைய மங்கை அவளுடைய கணவனின் கிரீடம்" என்று புகழப்பட்டிருப்பதையும் காணலாம். இவற்ருல் கற்புடைய மங்கையர் ஆடவருடைய சிரசிலணியத்தகுந்த திருமுடி என்று வழங்கப்படுகிறது. கலீபா ஓமார் சொல்வதாவது "மதத்தின் பின் பெண்ணைப் போல 'சிறந்த ஒரு அனுக்கிரகமில்லை" இதன் கருத்தென்ன? கலீபா ஓமார் மதத்திற்கடுத்தபடியான சிறப்புடையவர் பெண்கள் என்று சொல்கிருர். ஆபு சுலைமான் "ஒரு நல்லமனைவி இம்மையின் வரப்பிரசாதம் மட்டிலுமல்ல, மறுமையிலும் இன்பம் தந்து நிற்பாள்" என்று உரைக்கின்ருர். அவர் மற்ருேரிடத்தில் "ஒரு நல்லமனைவி ஒரு வீட்டை நிரப்பும் பாக்கியலக்ஷ்மி யாவாள்" என்கின்ருர். சுருங்கச் சொன்னுல் ஒரு நல்ல இல்வாள் குடும்பம் முழுதக்கும் பிரகாசத்தை யளித்து இன்பத்தை நல்கிநிற்பாள். பண்டைக்காலம் தொட்டு இந்து கணவர்கள் தம்மனைவியரைப் பாராட்டிப் போற்ற வேண்டுமென்பது வழக்காகி விட்டது. இதனை மனு (மூன்ரும் அதிகாரம் 55ம் பாட்டு) "ஒரு நன்மனைவி கணவனுல் போற்றப்பட வேண்டும்" என்று எழுதுகிருர்.

## பண்டிதர் கூற்று.

மனுநீதிகள் வேதங்கள் ஆகியவை கூறுவது ஒரு பாலிருக்கட்டும்; இனிபெரும் பண்டிதர்கள், கவிஞர்கள் என்ன சொல்கின்ருர்கள் என்று பார்ப்போம். மில்டன் என்ற ஆங்கிலப் பெரும்புலவர் ஒரு பெண் புனிதம், தெய்வீகம், நன்மை, அன்பு, இனிமை ஆகியவை ஒன்று சேர்ந்து திரண்டமைந்த கலவையாகும்" என்கின்ருர். உலகப்படைப்பில் மிகவும் அழகுவாய்ந்தது ஒரு பெண்ணே என்பது அவர் கருத்து. ஓரிடத்தில் அவர்,

> படைப்பினிலினிய பண்பினையுடையாய்!
> கடவுள் ஆக்கிய காணரும ஒளியே!
> எவ்வகையுயிரையும் எழிலினில் வெல்வாய்!
> எவ்வகை மனத்தையும் எழுந்துயர்ந்தோங்கி
> பொற்புறும் சீர்மை, புனிதம், நேர்மை,
> அற்பமில் அன்பு, ஆகியவெல்லாம்,
> ஒருங்கினிலமைந்த உருவே வெல்வாய்!

என்கின்ருர்.

தாமஸ் ஓட்வே, மில்டனிலும் ஒருபடி கடந்துவிட்டார். பெண்கள் புருஷர்களுக்கு நற்புத்தி புகட்டவே படைக்கப்பட்டிருக்கின்ருர் களென்பது அவருடைய கருத்து. அவர் பெண்கள் ஆண்களைவிட நிச்சயமாகவும் மேலானவர்கள் என்பதை யொப்புக் கொள்கிருர். அவர் ஓர் பாட்டில்,

> மாதே! எழிலான் மாண்புறு மணியே!
> நீதே இயல்பில் நிகழ்ந்த
> வெம் மாடவர்
> தம்மைச் சமன்செய் தன்பினினிறுவ
> செம்மைக்குணமொடு சேர்ந்தாயுலகே!
> சேணுறு முன்னியல் சிந்தித்தன்ருே,
> மாணுறு கடவுள் தூதர்கள் யாவரும்
> உன்னுருவென்ன வோதினருயர்ந்தோர்
> ................................

என்று கூறுகிருர்.

பின், பட்லர் என்ற புலவர் நிலகம் மிகப்பெரிய பலவானும் பெண்ணின் முன் தலையைத் தாழ்த்து கின்ருன் என்கின்ருர். தாமஸ் மூர் எல்லோரையும்விட வெளிப்படையாக ஆடவரினும் பெண்களே மேலானவர் என்பதைக் கூறிவிட்டார். அவர்,

> மூடிக்கிடக்கும் முகபடாம் பெயர்க்க;
> கூடிய மங்கையர் கூர்வேற் கண்ணினர்
> ஆடவர்தம்மை ஆளுவர் காணீர்.

என்கின்ருர்.

இங்ஙனம் பல புலவர்கள் கூற்றை ஆராய்ந்து பார்க்கின், பெண்டிர் ஆடவரினும் சிறப்புடையவர் என்பதை தெள்ளிதிற் காணலாம். பன்னூறு வருடங்கட்கு முன்னமைந்த உரோமப் பழமொழி "புருஷன் நினைக்கின்ருன்; பெண்கள் வழிவிடுகின்ருர்கள்" என்கின்றது. இதன் உண்மையை யாரால் மதிக்கமுடியும்! மற்ருெருபழமொழி "புருஷர்கள் உலகையாள்கிருர்கள்; பெண்கள் புருஷர்களையே ஆள்கின்ருர்கள்" என்கின்றது. ஒரு பிரஞ்சு பழமொழி "பெண்கள் எதையும் சாதித்து விடுகின்ருர்கள்; ஏனெனில் எதையும் ஆள்கின்ருர்கள்" என்று குறிப்பிடுகின்றது. இதே போல ஒரு சமஸ்கிருத சுலோகம் பெண்கள் பலம், பொறுமை, உணவு முதலிய எல்லாவற்றிலும் ஆடவரைத் தோற்கடிக்கின்ருர்கள் என்று கூறுவதை நம் நாட்டில் பலர் அறிவர். ஷேக்ஸ்பீயர் மகாகவி ஓரிடத்தில் 'பெண்கள் ஆடவரை காடி வரும் தேவ தூதர்களாம்" என்கின்ருர். இத்தகைய பல புலவர் கூற்றுகளையும் பழமொழிகளையும் ஆராய்ந்து பார்த்தால் பெண்கள் ஆடவரினும் மேலானவரென்பது விளங்கவில்லையா?

ஷேயிக் M. K. கித்வானி "பெண்" என்ற அவருடைய புஸ்தகத்தில் கூறுவதாவது:—"பெண்கள் எப்பொழுதும் பெண்களாகவே இருக்கவேண்டும்; அவர்கள் புருஷர்களின் இருதயத்தின் பாதுகாப்பாளராயமைய வேண்டும். அவர்கள் ஆடவரின் ரக்ஷகர்களாயிருத்தல் வேண்டும். ஆடவர் மனிதத்தன்மையற்ற மிருகத்தனமுள்ள அல்லது இயந்திரம்போல தாமாக இயங்கித்திரியும் பேதையர்களாயாகிவிடாமல் காத்துக்கொள்ள வேண்டுவது பெண்கள் கடமையாம்."

## பெண்கள் செய்வதென்ன?

பெண்களின் உயர்வு எதனைப்பற்றியிருக்கின்றது? "ஒரு தேசத்தின் முன்னேற்றம் அத்தேயத்தின் பெண்களின் முன்னேற்றத்தால் அளவிடப் படுகின்றது" என்ற கூற்றைப்பார்க்கையில் மேற்படிக் கேள்வியின் விடை யொருவாறு வெளியாகின்றது என்று சொல்லலாம். பெண்களே ஒரு நாட்டின் முன்னேற்ற ரதத்தையும் நாகரிகச் சக்கரத்தையும் உகைக்கின்ருள். பெண்தான் ஒருவனை அரசனுக்கவோ ஆண்டியாக்கவோ, புத்திசாலியாக்கவோ பேதையாக்கவோ வல்லவள். புருஷனின் பாக்கியத்திற்கதிபதி பெண்ணே. அவள் எண்ணினல் அவனை ரக்ஷிக்கலாம், அல்லது சிக்ஷிக்கலாம் தொட்டில் பழக்கம் சுடுகாடுமட்டும். இளமையில் பெண்கள் காண்பிக்கும் பாதுகாப்பு முறையே ஒருவனின் புரோகதிக்கு முக்கியகாரணம். இன்னும் கொஞ்சம் உள்நுழைந்து பார்த்தால் பெண்கள் கருவுறுகின்ற நாளையிலேயே போதனை செய்யத் தொடங்குகின்ருளென்று காணலாம். அபிமன்யூ வென்ற அர்ஜுன புத்ரன் தாய்வயிற்றிலிருக்கும் போது தான்

(12ம் பக்கம் பார்க்க)

# காந்திஜீ சுற்றுப்பிரயாணம்.

திருத்தப்பட்ட 'புரோகிராம்"

வாரத்தில் 5 நாள் காந்திஜீ பிரயாணம் செய்வார். இரண்டுநாள்-அநேகமாக திங்கள், செவ்வாய்க் கிழமைகளில்—தனியாக விருப்பார். அவ்விரண்டு நாளும் கடிதமெழுதுதல், ஹரிஜனுக்கு வியாசமெழுதுதல்முதலியவற்றிற்காகச் செலவிடப்படும்.

பிரயாண விபரம்

நவம்பர் 8-ந்தேதி முதல் டிசபர் 8உ வரை—மத்தியமாகாணம்.

டிசம்பர் 10 முதல் 14வரை டில்லி.

டிசம்பர் 16 முதல் 29வரை ஆந்திர மாகாணம்.

30ந்தேதி முதல் 1934 ஜனவரி 3-ந் தேதிவரையிலும் சென்னை நகரம்.

ஜனவரி 4ந்தேதி முதல் 13ந்தேதிவரையிலும் மைசூர், மலையாளம்.

ஜனவரி 14 முதல் 20வரையிலும் கொச்சி-திருவாங்கூர்.

ஜனவரி 21 முதல் பெப்ரவரி 9-ந் தேதி வரை தமிழ்நாடு.

11 பெப்ரவரி முதல் 17 பெப்ரவரி வரையிலும் ஒரிசா.

பெப் 18 முதல்மார்ச் 17வரையிலும் வங்காளம்.

18 முதல் 24 வரை ஆசாம்.

24 முதல் ஏப்ரல் 7 வரை பீஹார்.

ஏப்பரல் 8 முதல் மே 12 வரை ஐக்கிய மாகாணங்கள்.

மே 14 முதல் 26 வரை பஞ்சாப்.

மே 27 முதல் ஜூன் 2 வரை சிந்து தேசம்.

ஜூன் 3 முதல் ஜூன் 9 வரை ராஜபுதனம்.

ஜூன் 10 முதல் 16 வரை அகமதாபாதில் இளைப்பாறுதல்.

ஜூன் 17 முதல் 30 வரை குர்ஜரம்—கத்தியாவார்.

ஜூலை 1 முதல் 7 வரை பம்பாய் நகரம்

ஜூலை 8 முதல் 24 வரை ஹைதராபாத், மஹாராஷ்டிரம்.

ஜூலை 25 முதல் 31 வரை கர்னாடகம்.

இந்த நிகழ்ச்சிக் குறிப்பு விசேஷ காரணங்களேற்பட்டால் மாற்றமடையலாம்.



# சென்குப்தாவுக்கு அனுதாபத் தீர்மானம்.

ரத்து செய்யப்பட வேண்டுமோம்.

சென்ற செப்டம்பர் மாதம் 29ந் தேதி ஸ்ரீமான் ஜே. எம். சென்குப்தாவின் மரணத்திற்கு அநுதாபம் காட்டி ஸ்ரீ வில்லிபுத்தூர் தாலூகா போர்டில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அத்தீர்மானம் ஆக்ஷேபணைக் குரிய முறையில் அமைக்கப்பட்டிருப்பதாகச் சொல்லி, அதை ஏன் ரத்து செய்யக்கூடா தென்பதற்கு நவம்பர் 26ந் தேதிக்கு முன்பாகக் காரணம் காட்டுமாறு சர்க்கார் உத்திரவிட்டிருக்கின்றனர். சர்க்கார் உத்திரவில் பின் வருமாறு கூறப்பட்டிருக்கிறது:—

1933 செப்டம்பர் 29ந் தேதி யன்று ஸ்ரீ வில்லிபுத்தூர் தாலூகா போர்டார் ஸ்ரீமான் சென்குப்தாவின் மரணத்தைப் பற்றி நிறைவேறியுள்ள தீர்மானம் ஆக்ஷேபகரமான பதங்களுடன் கூடியதாயிருக்கிறதென்று சர்க்கார் கருதுகின்றனர். தீர்மான விஷயம் போர்டின் நடவடிக்கைகளோடு சம்பந்தப் பட்டதல்ல என்பது ஒரு புறமிருக்க, தீர்மானத்தில் சர்க்கார் செய்கையும் கண்டிக்கப் பட்டிருக்கிறது. அதோடு விரும்பத்தகாத வங்க அரசியலியக்க மொன்றுக்கு அத்தீர்மானம் அநுதாபம் காட்டுவதாகவு மிருக்கிறது. ஆனல் இந்த விஷயத்தில் போர்டு மீதாவது, போர்டு தலைவர் மீதாவது கடினமான நடவடிக்கைக ளொன்றும் எடுத்துக் கொள்ளுவதாய் சர்க்கார் உத்தேசிக்க வில்லை.

## ஹிட்லர் ஆட்சி முறையில் புதிய மாறுதல்கள்

ராஜீய விரோதிகளுக்குப் பொது மன்னிப்பளித்து அவர்களை விடுதலை செய்தபின், ஹர் ஹிட்லர் யூதர்களிடத்திலும் முன்னைவிட அதிகமான சகிப்புத்தன்மை காட்டுவார் என்று கூறப்படுகிறது. நாஷித் துருப்புகளாகிய பழுப்புச் சட்டைக்காரர்களின் உடையில் சிறிது மாறுதல் ஏற்படும். பிரிட்டன் ருஷ்யாவிலுள்ள சைன்யங்களின் உடைகள் எப்படியோ அவ்விரண்டையும் அநுசரித்து உடைகள் அமைக்கப்படும்.

## சில நியமனங்கள்.

மிஸ்டர் வி. எஸ். ஹெஜ்மாடி ஐ. சி. எஸ். [illegible] திரும்பியதும் தஞ்சாவூர் சப் கலெக்டராகவும் உதவி ஜில்லா மாஜிஸ்டிரேட்டாகவுமிருக்க நியமனம்.

லெப்டினன்ட் கர்னல் எ. பி. ஜி. லாரிமர் ஐ. எம். எஸ். மதுரை ஜில்லா மெடிகல் ஆபீசராக நியமனம்.

மேஜர் பி. வெர்டன் ஐ. எம். எஸ். தஞ்சாவூர் ஜில்லா மெடிகல் ஆபீசராக ஆக்ட் செய்ய நியமனம்.

## நோட்டீஸ்.

இராமநாதபுரம் டி. கோர்ட்டு.

1933 of O.P. நெ. 111.

ஒத்தை ஆல வெங்கிடசாமி நாயக்கர் } மனுதார்.

தாத்தய நாயக்கர் வகையரு } எதிர்மனுதார்கள்

மைனர்கள் லட்சுமி அம்மாள் சீனிவாசன் விஷயமாய்.

ஷை மைனர்களுக்கு 1-வது எதிர்மனுதார் தாத்தி நாயக்கனை கார்டியன் ஸ்தானத்திலிருந்து நீக்கி மனுதாரை கார்டியனாக நேமிக்க ஷை கோர்ட்டில் மனுக்கொடுத்து ஷை மனு 4-12-33 தேதியில் வாயிதா யேற்பட்டிருக்கிறபடியால் ஆக்ஷேபணையுள்ளவர்கள் ஷை தேதியில் ஷை கோர்ட்டில் காலை 10 மணிக்கு வந்து ஆஜராகி தெரியப் படுத்திக் கொள்ளவும்

T. நாரயண பிள்ளை
B. A. B. L
மனுதார் வக்கீல்.
மலை இல்லம் மதுரை.

# பாரத் பொருளாதார மந்தத்தை எதிர்த்து நிற்கிறது.

வடவிந்தியாவிலுள்ள பெரிய பத்திரிகையான "டிரிபியூன்" எழுதும் மதிப்புரையாவது:—

லாகூர் செப் 2—

கடுமையான பொருளாதார மந்தம் எங்கும் பரவியிருந்தாலும் பாரத் இன்ஷூரன்ஸ் கம்பெனிக்கு 1932 ஓர் செழிப்பான வருஷமென்பதுதான் ஆகஸ்டு 26ந்தேதி பங்குதாரர்களால் அங்கீகரிக்கப்பட்ட டயரக்டர்கள் அறிக்கையின் இரகசியம்.

பாரத் அகில இந்திய சம்பந்தமுடையதாகும். அதற்கு நாடு முழுதும் ஏஜெண்டுக ளிருக்கிறார்கள். அக்கம்பெனி சமீபத்தில் வெளியிட்ட அறிக்கையால் பொருளாதார மந்தமுள்ள இக்காலத்தில் மிகுந்த தொல்லைகள் வந்தாலும் வெற்றிகரமாக எதிர்த்து நின்றுவிட்டதென்பதைக் கண்டு கொள்ளலாம். இங்கு குறிப்பிடப்படுகின்ற வருஷத்தில் இக்கம்பெனி 4854 புரொப்போசல்களைப் பெற்றிருக்கிறது. அவற்றின் மொத்தத் தொகை ரூபாய் 7732042. பொருளாதார மந்தத்தால் புதிய தொழில் முறையில் குறைவு காணப்பட்டாலும் வெளியிடப்பட்ட பாலிசிகளில் நூற்றுக்கு 41.24 அதிகரிப்பும், அஷூர் செய்யப்பட்ட தொகையில் நூற்றுக்கு 9.75 அதிகரிப்பும் காணப்படுகிறது: விவரம் வருமாறு:—

| வருடம் | மொத்த புரொப்போசல்கள் | மொத்த பாலிசிகள் | அஷூர் செய்யப்பட்ட தொகை |
|---|---|---|---|
| 1923-27 | 24679 | 19919 | ரூ 45705394 |
| 1928-32 | 38126 | 28135 | ரூ 49932540 |

கம்பனியின் மரண விஷயம் மிகவும் அனுகூலமான தாம். மரண "க்ளையும்கள்" ரூ 368018 தானுயின 1931 ம் வருடத்தில் மரண "க்ளையும்" ரூ 519591. இந்த அனுகூலமான நிலைமை பிரிமியத்தில் நூற்றுக்கு 3.7 விகிதத் தொகையைத்தான் பாதித்தது. சென்ற வருடம் போனது நூற்றுக்கு 18 விகிதம். இந்தக் குறிப்பினுல் கம்பனிக்குப் பதிவு செய்யப்படும் அங்கத்தினர்கள் உடல் நிலை விஷயத்தில் அதிகக்கவனம் செலவிடப்படுகின்ற தென்பதைக்காண்பிக்கின்றது. மரண காலத்தில் அந்த உறுப்பினர்கள் ஆயுட்காலம் 7 வருடம் 21 நாளாக இருந்திருக்கிறது. இது மிகுந்த திருப்தியைத் தருவதாகும்.

### செலவு சுருக்கம்.

இன்னும் மேற்குறித்த அறிக்கையால் தெரிவது செலவு விஷயத்தில் மிகத்தாழ்ந்த படிக்கு வந்துவிட்டதென்பதாகும்.

1931 ல் செலவான தொகை 729781-11-0 பிரஸ்தாப வருடம் செலவான தொகை 604069-7-5 இதனை பிரிமியவருமானத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நூற்றுக்கு 22.4 என்று காணலாம். சென்ற வருட செலவு நூற்றுக்கு 25·7 எனவே பிரஸ்தாபவருடத்தில் நூற்றுக்கு 3.26 செலவில் குறைந்துவிட்டது என்று சொல்லலாம்.

பிரஸ்தாப வருடத்தில் கம்பனிகட்டிடங்களாகவும் நில சொத்தாகவும் ஏராளமாக வாங்கியிருக்கிறது. கல்கத்தாவில் "பாரத் பவன்" என்று ஒரு கட்டிடம் கட்டப்பட்டிருக்கிறது. அதற்காகச் செலவான தொகை 5 லட்சம், அதில் சப்- ஆபீசுக்குத் தாராளமாக இட மிருப்பதோடு வாடகைக்குவிடத்தகுந்த முறையில் ஏராளமாக யிடமிருக்கிறது; அது நல்ல வருமானத்தையும் கொடுக்கிறது. அதோடு 44000 ரூபாயில் 7 கோட்டா நிலமும் வாங்கப்பட்டிருக்கிறது. கபூர்தாலா வீட்டு எஸ்டேட்டில் நான்கு பகுதிகளுடைய மூன்று கட்டிடங்கள் கட்டப்பட்டு வேலை முடிவெய்தப் போகிறது. ஒவ்வொரு கட்டிடத்திலும் "காரேஜ்" உட்பட 28 வேலைக்காரர்கள் விடுதியும் 6 கடைகளு மிருக்கின்றன. அதிசீக்கிரத்தில் இக்கம்பனி பம்பாயில் அதிகமாகத் தொழில் நடக்குமிடமாகிய எல்பின்ஸ்டன் வட்டகையில் 2 லட்சத்து 30 ஆயிரத்தில் ஒரு கட்டிடம் கட்டலாம். கம்பனி நிலத்தில் போட்டுள்ள பணம் நல்ல வருமானத்தைத் தருவதால் தகுந்த சமயங்களில் இந்தியா வியாபார நகரங்களிலெல்லாம் கட்டிடம் முதலியன அமைக்க உத்தேசித் திருக்கிறது.

### Assets (விலைமதிப்பு)

கம்பனியின் அசெட்டுகளின் மொத்தமதிப்பு 17025080 அத்தொகைகள் அடியில் வருமாறு நிக்ஷேபிக்கப் பட்டிருக்கிறது.

1 பாலிசிதார்கட்கு ரூ 994483 கடனாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அது நஷ்டமாகாத நிக்ஷேபமாம்

2 கல்கத்தா, நாகபுரி, ராவல்பிண்டி லாகூர் முதலிய விடங்களில் கட்டிடங்களில் 2642380 ரூபாய் போடப்பட்டிருக்கிறது. இத்தொகை வருமானமுடையதாம்.

3 பலவித கில்ட் எட்ஜ்டு செக்யூரிட்டிகள், டிபெஞ்சர்கள்; ரயில்வேபங்குகள் டிரஷரி பங்குகள் ஆகியவற்றில் 1932 டிசம்பர் 31ந் தேதி கண்ட மார்க்கட் விலையில் 1862847 ரூ போடப்பட்டிருக்கிறது.

4 "பேஸ் வாலிவில்" டிபெஞ்சர்களுக்காக 1910000 விடப்பட்டிருக்கிறது.

5 கடன்கள் ரூ 3635810 இதில் செக்யூரிட்டிகளின் மேல் கொடுக்கப்பட்டிருப்பது 3301859 நபர் ஜாமீனில் கொடுக்கப்பட்டிருப்பது ரூ. 33395-0-0

6 தொழிற்சாலைகளின் ஷேர் (பங்குகளாக விடப்பட்டிருப்பது ரூ 391861 இதில் ரூ 1797389-6-0 லாகூர் எலக்டிரிக் சப்ளைகம்பனி லிமிடெட் பங்குகளாக இருக்கிறது. இந்த நிக்ஷேபம் அதிகமான லாபமுடைய தென்பதேன் பங்குகள் இப்போது இரட்டிப்புத் தொகைக்கும் உயர்ந்துவிட்டன,



# கோர்ட்டுச் செய்திகள்.

(நமது நிருபர்)

## தேவகோட்டை.

### பலவான்குடி "சிவநேசன்" ஆசிரியர்மீது அவதூறு வழக்கு.

ஷை வழக்கின் விசாரணை ஏற்கனவே குமரனின் முந்தின வாரங்களில் வெளிவந்திருக்கின்றது. முத்தையா செட்டியார் தரப்பிலும் பத்திரிகாசிரியர் ராமசாமி செட்டியார்தரப்பிலும் வக்கீல்கள் M. R. சிவராமகிருஷ்ணய்யரவர்களாலும் P. ராமசாமி அய்யரவர்களாலும் வழக்கு விஸ்தாரமாய் 2 நாட்களாக எடுத்துரைக்கப்பட்டபின்னர் 15—11—33உ டிஸ்ட்ரிக்ட் முன்சீப் மகா-ா-ாஸ்ரீ ரெங்கசாமி அய்யங்காரவர்கள், பிரதிவாதி சிவநேசன் பத்திரிகையில் அநேக கட்டுரைகள் எழுதுவது வழக்க மென்றும் அதில் தாவா கட்டுரையும் ஒன்றென்றும் அது வாதியைப் பாதிக்கக் கூடிய தல்லவென்றும் பிரதிவாதியே வாதியைக் குறிப்பிட்டு அவமானப்படுத்துவதற்காக எழுதப்படவில்லை யென்று கூறும்பொழுது வாதிக்கு ஷை கட்டுரையினுல் யாதொரு மானநஷ்டமும் ஏற்படக் கூடியதில்லை யென்றும் கூறி வாதியின் வழக்கைத் தள்ளுபடி செய்து விட்டார்.

### மீனுக்ஷி மில் மானேஜர்மீது வழக்கு.

கணக்கு பரிசோதகர் ரிப்போர்ட் காட்டாத குற்றம்.

(நமது விசேஷ நிருபர்)

மதுரை நவம்பர் 21—

இந்நகர் ஸ்ரீ மீனுக்ஷிமில் மானேஜிங் டைரெக்டரான ஸ்ரீ கருமுத்து தியாகராஜ செட்டியார் மீது இந்திய கம்பெனிகள் சட்டப்படி கொண்டுவரப் பட்டிருக்கும் வழக்கு விசாரணையிலிருந்து வருகிறது. ஸ்ரீ செட்டியார், ஜாயிண்ட் ஸ்டாக் உதவி ரிஜிஸ்திராருக்கும் மில்லின் பங்குதார்களுக்கும் சமர்ப்பித்தமில்லின் வரவுசெலவு கணக்குடன் அதை பரிசோதித்த ஆடிட்டரின் அபிப்பிராயத்தையும் சேர்த்து சமர்ப்பிக்கவில்லை யென்பதை ஒட்டியே மூன்று வழக்குகள் தொடரப்பட்டிருக்கிறது.

மூன்று வருஷத்து கணக்குகளை ஒட்டிய மூன்று வழக்குகளையும் ஒரேமாஜிஸ்திரேட் விசாரணை நடத்தலாமா என்ற பிரச்னை ஸ்ரீ செட்டியாருக்காக ஆஜராகும் இந்நகர் பிரபல அட்வொகேட் ஸ்ரீ. எஸ். ராமானுஜத்தால் விவாதிக்கப்பட்டு நடத்தலாமென்று ஏற்கனவே முடிவு செய்யப்பட்டது. ஆகவே மூன்றுவழக்குகளும் மதுரை முதல் வகுப்பு நகர மாஜிஸ்திரேட் ஸ்ரீ. எம். பி. பாய் முன்னர் விசாரணை செய்யப்பட்டது.

அவைகளில் ஒரு வழக்கில் தற்போது விசாரணை முடிவாயிருந்த போதிலும் மற்ற வழககுகளின் விசாரணையை ஒட்டி அதில் தீர்ப்பு ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது. வழக்கு விசாரணை நாளது நவம்பர் 29ந் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீமான் செட்டியாரின் சார்பாக அட்வொகேட்டுகளான ஸ்ரீமான்கள் ஆர். விச்வனுதய்யர், எச். டி. நாராயணசாமி அய்யர் முதலியவர்களால் உதவி செய்யப்பட்டு அட்வோகேட்டுகளான ஸ்ரீமான்கள் ஏ. லெக்ஷ்மிநாராயணய்யரும் எஸ். ராமானுஜமும் ஆஜராகிறுர்கள்.

## மணிக்கு 372 மைல்.

ஒரு இத்தாலிய விமானி பிளெரியட் கோப்பையை ஜயிப்பதற்காக மிகவிரைவில் பறந்து சென்ருர். முசோலினியின் ஆசை இத்தாலியா விமானவோட்டத்தில் முதன்மை பெற வேண்டு மென்பதாகும். அவ்விமானியின் பெயர் காப்டன் பியட்ரோஸ் காபினெல்லி. அவர் மணிக்கு 372 மைல் வேகம் சென்ருர். அவரது விமானம் 2400 குதிரை வேகமுடையது.

பிளரியட் கோப்பை சர்வதேசங்களும் நடத்தும் போட்டியைச் சேர்ந்ததாகும். அதனை அடைபவர் 1250 பவுன் பரிசு பெறுவர்.

பிளரியட் பிரஞ்சு விமானம் செய்தவர். அவர்தான் மேற்படி கோப்பையைக் கொடுத்தார்.

# தேவகோட்டை.

(நமது நிருபர்)

வெள்ளையனூருணி வீதியில் களவு:—தேவகோட்டை வெள்ளையனூரணி தென்கரையிலிருக்கும் பழனியப்ப செட்டியாருடைய ஜவுளிக்கடையில் சுமார் 1000 ரூபாய்க்கு மேற்பட்ட ஜவுளி சாமான்கள் 18உ இரவு களவுபோயிருப்பதாகத் தெரிகிறது. ஜவுளிக் கடையில் பிரதி இரவு காவலுக்காகப் படுத்திருந்த காவல்காரன் போலீஸ் பாதுகாப்பில் வைக்கப்பட்டிருக்கிறுன். போலீசார் காவல்காரனிடம் வாக்குமூலம் வாங்கும்பொழுது ஷை காவல்காரன் தான் படுத்திருக்கும்பொழுது சுமார் 50 மனிதர்கள் நள்ளிரவில் வந்ததாகவும் அவர்களுடைய பெருங்கூட்டத்தால் தான் பயந்து சப்தம் போடாமலிருந்துவிட்டதாகவும் கூறியிருப்பதாகத் தெரிகிறது. கள்ளிக்கோட்டை ஓட்டுக் கட்டிடமாதலால் திருடர்கள் ஓடுகளைப் பிரித்து இறங்கி ஜவுளி சாமான்களை அப்புறப்படுத்தியிருப்பதாகத் தெரிகிறது. போலீசார் வெகுதீவிரமாகப் புலன் விசாரித்து வருகின்றுர்கள்.

திரு. லாசரடோவுக்குத் தேனீர் விருந்து;- நவம்பர் 16உ இவ்வூர் வக்கீல்களும் சப் கலெக்டராபீஸ் கிளர்க்குகளும் சேர்ந்து திரு லாசரடோ அவர்கள் பாலக்காட்டிற்கு மாற்றிப் போவதற்காக அன்னுருக்கு சப்கலெக்டராபீசில் ஒரு தேனீர்விருந்து நடத்தினர். புதிய ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் T S ஸ்வாமிநாதன் I C S அவர்களும் விருந்திற்கு வந்திருந்தனர். இரண்டு ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட்டுகளும் மாலையிடப்பட்ட பின் புகைப்பட மெடுக்கப்பட்டது. விருந்து முடிந்ததும் வக்கீல் திரு. கோபாலாச்சாரியார், வக்கீல்கள் சார்பாகவும் ஆபீஸ் கிளர்க்குகள் சார்பாகவும் எழுந்திருந்து திரு. லாசரடோ I. C S. அவர்களை வெகுவாகச் சிலாகித்துப் பேசினுர். திரு. லாசரடோ அவர்கள் கோபாலாச்சாரியாருக்கு வந்தனங் கூறக்கூட்டம் கலைந்தது. அன்றைய மாலையில் வக்கீல் சிவசுப்பிரமணிய அய்யரவர்கள் தனித்த முறைமையில் திரு. லாசரடோ அவர்களுக்கு ராம் நகரிலுள்ள முத்து. கரு. பங்களாவில் ஒரு தேனீர்விருந்து நடத்தினுர் அவ்வமயம் அநேக வக்கீல்களும் வந்திருந்தனர்.

தேவகோட்டை வாலிபர் சங்கம் முதலாவது ஆண்டுவிழா:—மேற்படி சங்கத்தின் முதலாவது ஆண்டு விழா வெள்ளையனூருணித் தெருவிலுள்ள ஸ்ரீனிவாச வித்தியாசாலையில் 19உ மாலை 4 மணிக்கு உயர் திரு. S. G. அஸ்வத்தநாராயண தீக்ஷதர் தலைமையில் ஆரம்பமாயிற்று. சிற்றுண்டிகள் வழங்கப்பட்டபின், வாலிபர்களின் புகைப்படமொன் றெடுக்கப்பட்டது. பின்னர் கூட்டம் மாலை 5—30 மணிக்கு ஆரம்பமாயிற்று. T. R. சீனிவாசராகவன் "பக்தி" என்பது பற்றி சிறிது நேரம் பேசியதும் உயர் திரு. K. Y. ராமசர்மா அவர்கள் "சனதனதர்மம்" என்பது பற்றி ஒருமணி நேரம் சொற்பொழிவாற்றினுர். பின்னர் தலைவரின் முடிவுரையுடன் கூட்டம் இனிது முடிந்தது.

அடிஷனல் முன்சீப் கோர்ட்டு நியமனம்.

17—11—33.

இன்று தினம் மகா-ா-ா-ஸ்ரீ ரெங்கசாமி அய்யங்காரவர்கள் பிரின்ஸ்பல் டிஸ்டிரிக்ட் முன்சீப் ஸ்தானத்தை மகா-ா-ா-ஸ்ரீ K. கோபாலன் அவர்களிடம் ஒப்புவித்துவிட்டு அடிஷனல் முன்சீபாக ஏற்கனவே டிஸ்டிரிக்ட் முன்சீப் கோர்ட்டு இருந்த விடத்திலேயே கச்சேரி நடத்திவருகிறுர்கள். மகா-ா-ா-ஸ்ரீ K. கோபாலன் அவர்கள் பிரின்ஸ்பல் முன்சீபாக சார்ஜ் வாங்கிக்கொண்டதும் பார் ரூம் இருந்த இடத்தில் கச்சேரி நடத்தி தன் விசாரணைக்குப் போட்டிருந்த வழக்குகளை ஒத்திப்போட்டுவிட்டு ஒருவாரம் ரஜாவில் போயிருக்கிறுர். பிரின்ஸ்பல் முன்சீப் அவர்கள் இம்மாதம் 28உ வாக்கில் வருவாரெனத் தெரிகிறது.

# சேத்தூர் ஜமீன்

## காட்டுத் தகராறு.

குடிகள் தங்கள் உரிமைகளையே அனுபவிப்பதாய்ச் கூறி, வரம்பை மீறுமலும், ஜமீன் நிர்வாகிகள் உத்தியோகஸ்தர்கள் மேற்பார்வையினின்று தப்பித்துக் கொள்ளவோ ஜமீன்தார் அவர்களது உத்தரவைப் பெறுமல் குடிகள் சேத்தூர் ஜமீன் காட்டில் சென்று ஆடுமாடுகளை மேய்த்தோ அல்லது மரங்களை விறகிற்காக வெட்டி சேதமாக்காமலோ ரிருக்கும்படி. அவ்வாறு செல்லும் ஜமீன் குடிகளைச் சாஸ்வதமாய்த் தடுக்கவும், மேற்கூறிய நிபந்தனைகளை அமுல் செய்யவுந் தமக்குப் பாத்தியமுண்டென்றும், மேற்படி காடு ஜமீனுக்கே சொந்த மென்றும் ஒரு டிக்ளரேஷன் கொடுக்க வேண்டுமென்றும் கோரி மதுரையிலுள்ள ராமனுதபுரம் சப் கோர்ட்டில் சேத்தூர் ஜமீன்தார் மனுதாராகவும், குடிகளில் பலர் எதிர் மனுதார்களாகவும் தொடரப்பட்ட வழக்கு 18-ந் தேதி சனிக்கிழமை லீவு நாளானுலும் ஸ்பெஷலாய் இவ்வழக்கு வாக்குவாதத்திற்காக ராமனுதபுரம் சப் ஜட்ஜ் ஸ்ரீமான் டி. எ. சுப்பையா முன்பாக மேற்கூறிய மனுக்கள் விவாதிக்கப் பட்டன.

சேத்தூர் ஜமீன்தாரான வழக்கின் மனுதாருக்குச் சென்னை அட்வொகேட் ஜெனரல் ஸர் அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் ஆஜராகி வாக்குவாதஞ் செய்கையில், மனுதாரான ஜமீந்தாருக்கு ஏற்கனவே யிருந்து வருவதும் ஒப்புக் கொள்ளப்பட்டதுமான உரிமைகளையே தற்போது பாதுகாக்கும்படி கோரப்படுவதாயும், காட்டை மேற்பார்வை செய்து கொள்ளத்தக்க எவ்வித நியாயமுறை கூறினும் அவற்றைத் தமது கக்ஷிக்காரர் ஒப்புக்கொள்ளுவதில் ஆக்ஷேபமில்லை என்றும் கூறினுர்.

குடிகள் சார்பாக குடிகள் தங்களுக்கு இதற்குமுன் டிகிரிமூலம் ஏற்பட்ட உரிமைகளையே அவர்கள் அனுபவித்து வருவதாயும், அவர்கள் தங்கள் உரிமைகளுக்கு ஹத்துமீறிச் செய்வதாய் யாதொரு ருஜுவுமில்லை என்றும், ஆகவே இந்நிலைமையில் தடையுத்தரவு வேண்டுமென்ற பிரச்னையே எழுவதற்கில்லைஎன்றும்வாதிக்கப்பட்டது.

வாக்குவாதங்களுக்குப் பின் கனம் ஜட்ஜ் அவர்கள் மனுவை செலவு தொகையுடன் தள்ளுபடி செய்து தீர்ப்புக் கூறினுர்.

மனுதாருக்குச் சென்னை அட்வொகேட் ஸ்ரீ என். ராஜகோபாலய்யங்கார் உதவியுடன் சென்னை அட்வொகேட் ஜெனரலும்; மதுரை அட்வொகேட்டுகள் ஏ. லக்ஷ்மிநாராயணய்யர், ஏ. கே. அண்ணுசாமி அய்யரும், பிரதிவாதிகளுக்காக ஸ்ரீமான் வி. டி. தாத்தாச்சாரியார், டி. எஸ். சங்கரநாயணய்யர், ரெங்கனுதம், பிச்சுமணி அய்யரும் ஆஜரானுர்கள்.

# நோட்டீஸ்.

காரைக்குடி வெ. கு. நா. நாராயணன் செட்டியார் மகன் வெ. கு. நா. காசிநாதன் செட்டியார் சகலருக்கும் அறிவிப்பது யாதெனில்:—தற்காலம் காரைக்குடி முத்துப் பட்டணத்தில் வசித்துவரும் M. N. வேணுகோபால் நாயுடு என்பவர் என்னை ஏமாற்றி மோசக் கருத்துடன் Power of Attorney ஒன்று 1932-ம் ஞு டிசம்பர் மாதத்தில் எழுதி வாங்கி ரிஜிஸ்டர்செய்து அதை வியாஜமாக வைத்துக்கொண்டு எனக்கு சொந்தத்திற்கும் எங்களுடைய வெ. கு. நா. எஸ்டேட்டுக்கும் வரவேண்டிய தொகைகளை வசூலித்து வியாபித்துக்கொள்ளவும் மற்றும் என்னுடையவும் எங்கள் வெ. கு. நா. எஸ்டேட்டினுடையவும் Interest க்கு Detrimental ஆக காரியங்கள் செய்ய முயற்சித்து வருகிறுர் என்றும் ஷை Power ஐ கான்சல் செய்தும் ஷை வேணுகோபால் நாயுடுவிற்கு ஷைவிபரத்திற்கு நேரில் சொல்லியும் போஸ்டுமூலம் கோட்டீசும் கொடுத்திருக்கிறேன். எனக்காகவாவது எங்கள் வெ. கு. நா. எஸ்டேட்டுக்காகவாவது ஷை வேணுகோபால் நாயுடு யாதொரு செய்கையும் செய்யப் பாத்தியமாவது அதிகாரமாவது கிடையாது. ஷையாரிடம் எனக்காகவாவது எங்கள் வெ. கு. நா. எஸ்டேட்டுக்காகவாவது எவரும் எவ்வித தொகையும் கொடுக்கக்கூடா தென்றும் யாதொரு ஒப்பந்தமும் செய்யக்கூடா தென்றும் மீறி எக்காரியமுஞ் செய்தால் அவை என்னையும் எங்கள் வெ. கு. நா. எஸ்டேட்டையும் கட்டுப்படுத்தாது என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

வெ. கு. நா. காசிநாதன் செட்டியார்.

# கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விவரம் வருமாறு:—

| கப்பல் | புறப்படுந்தேதி |
|---|---|
| ரோனு | 25—11—33 |
| ரஜூலா | 9—12—33 |
| ரோனு | 23—12—33 |

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகபட்டினத்துக்குவரும்விவரம்:—

| | |
|---|---|
| ரஜூலா | 30—11—33 |
| ரோனு | 14—12—33 |
| ரஜூலா | 28—12—33 |

ரங்கூனுக்கு வெள்ளிக்கிழமை தோறும் சென்னையிலிருந்து கப்பல் புறப்படுகிறது.

# ரயில் வண்டிப்போக்கு வரவு

திருச்சி—மானுமதுரை.

| | | 25 நிர் பாசஞ் | 1 நிர் மெயில் | 27 நிர் பாசஞ் | 39 நிர் பாசஞ் | 33 நிர் மிச்சட் | 31 நிர் பாசஞ் | தனுஷ் எக்ஸ். |
|---|---|---|---|---|---|---|---|---|
| திருச்சி ஜங் | புறப் | 3-50 | 7-45 | 11-0 | 13-25 | ...... | 17-20 | 21-54 |
| காரைக்குடி | வரும் | 6-24 | 10-10 | 13-37 | 16-13 | ...... | 20-5 | 0-25 |
| காரைக்குடி | புறப் | 6-30 | 10-20 | ...... | 16-35 | 17-35 | ...... | 0-33 |
| மானுமது | வரும் | 8-18 | 12-6 | ...... | 18-30 | 20-15 | ...... | 2-15 |
| மானுமது | புறப் | 9-30 | 12-26 | ...... | 18-40 | ...... | ...... | 2-29 |

மதுரை—மானுமதுரை.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| மதுரை | புறப் | 0—30 | 8—0 | 10—54 | 16—35 | 18—5 |
| மானுமதுரை | சேர் | 2—4 | 9—20 | 12—2 | 17—52 | 19—50 |

மானுமதுரை—திருச்சி.

| | | 32 நிர் பாசஞ் | 30 நிர் மிக்ஸட் | 34 நிர் பாசஞ் | 2 நிர் மெயில் | 26 நிர் பாசஞ் | தனுஷ் எக் |
|---|---|---|---|---|---|---|---|
| மானுமதுரை | புறப் | ...... | 5-55 | 9-35 | 14-46 | 18-6 | 22-42 |
| காரைக்குடி | வரும் | ...... | 8-39 | 11-31 | 16-28 | 19-54 | 0-27 |
| காரைக்குடி | புறப் | 6-45 | 8-53 | 11-40 | 16-34 | 20-7 | 0-37 |
| புதுக்கோட்டை | புறப் | 8-5 | 10-11 | 13-1 | 17-43 | 21-17 | 1-44 |
| திருச்சி (ஜங்) | வரும் | 9-37 | 11-43 | 14-38 | 18-55 | 22-41 | 3-2 |

மானுமதுரை—மதுரை.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| மானுமதுரை | புறப் | 5-0 | 8—29 | 14—43 | 18—40 | 22—45 |
| மதுரை | சேர் | 6-40 | 9—55 | 15—55 | 20—5 | 0-5 |

# குமரன்

காரைக்குடி.
ஸ்ரீமுக-ஹூ கார்த்திகை-மீ 8உ

## விவசாயிகள் துயரம்.

வியாபார மந்தம் விவசாயிகளைப் பெருந் துன்பத்துக்காளாக்கி வருகிறது. நமது நாடு ஒரு கைத்தொழில் நாடன்று. நாட்டின் ஜனத்தொகையில் 100 க்கு 85 பேர் விவசாயத்தொழிலைக் கொண்டிருக்கின்றனர். இந்திய நாட்டின் உயிர்த்தொழில் விவசாயமே என்பது வெளிப்படையாகும். விவசாயத்திலும் நெல்வேளாண்மையே முக்கியமானதாகும். விளைபொருள்கள் யாவும் விலையிறங்கி நிற்பதால் விவசாயத் தொடர்புள்ள தேசங்கள் யாவும் இந்த நெருக்கடியில் துயரடைந்து வருகின்றன. ஆனால் நெல் விளைப்பதில் மிகச் சிறப்படைந்த நமது நாட்டுக்கு ஒரு நாளும் அழிவில்லையென்று அறிவாளிகள் கூறியிருக்கின்றனர். 'மேழிச் செல்வங் கோழைபடாது' 'உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர் பழுதுண்டு வேறோர் பணிக்கு' என்ற மாதிரியில் பல புலவர்களும் பாடி வைத்திருக்கின்றனர். நல்ல நாளிலேயே மாதம் மும்மாரி பொழிந்ததாகக் கூறப்படும் பழய காலத்திலேயே 'உழுதவன் கணக்குப்பார்த்தால் உழக்குதானும் மிஞ்சாது' என்று குறிப்பிட்டுக்கூறிய வரும் உண்டு. இதனால் நெல்விளைவைக் கொண்டு பெரிய லாபத்தைத் திரட்டமுடியாதென்பது ஒருவாறு புலனாகும். வரி முதலியன அதிகமில்லாத பழய காலத்திலேயே நிலைமை இப்படியிருந்திருக்கிறது.

இன்று விவசாயிகள் படுந்துயர் கொஞ்சமல்ல. நிலவரி இடுப்பை முறிக்கிறது. முக்கியமாக நெல்விளையும் நிலங்கள் மலிந்து நிற்குமிடம் தஞ்சை ஜில்லாவும் பர்மாவுமாகும். இவ்விரண்டிடங்களும் இன்று மண்ணாகி நிற்கின்றன வென்பதை மறுப்பாரில்லை. நிலமுள்ளவர் படும்பாடு கொஞ்சமல்ல. 'வித்தெலாம் வயலில் வீசி வருந்தி வானத்தைப்பார்க்கும் ஒரு ஏருள்ள விவசாயிமாதிரி' என்று கூறப்பட்டதைப் போலக் கையிலுள்ள பணத்தை யெல்லாம் வீசி நிலம் வாங்கிக் கடனுக்கும் செலவுக்கும் வரிப்பணத்துக்கும் கண்ணைக்கசக்கிக் கஷ்டப்பட்டு நிற்கும் மக்களைப் பந்திபந்தியாய்க் காண்கிறோம்.

பர்மா நெல் ஜப்பான் ஜெர்மனி முதலிய வெளிநாடுகட்கு ஏராளமாக ஏற்றுமதியாயிற்று. தஞ்சை நெல் சிலோன் முதலிய வேற்று நாடுகட்கு ஏற்றப்பட்டது. இன்றைய நிலைமை கூறுந்தரத்ததாக இல்லை. சென்ற ஐரோப்பிய மகாயுத்தகாலத்தில் கப்பல் போக்குவரவு தடைப்பட்டு ஒரு தேசப் பொருள் மற்ற தேசத்திற்குச் செல்லமுடியாமல் பெருந்துன்பமாகி விட்டது. அப்பொழுது தான் எந்த தேசத்தில் எந்தச்சரக்கு இல்லை யென்பது வெளியாயிற்று. உணவுப் பொருள் விளைவிக்கப் பெறாத தேசங்கள் அதிலிருந்து உணவுப் பொருளை விளைவிக்க முயற்சித்தன. சிலோன் மலாய்நாடு போன்ற மலைநாடுகளிலும் நெல் பயிரிடப்படுகிறது. ஆயிரக்கணக்கான டன் நெல்லை பர்மாவிலிருந்து கொள்முதல் செய்த ஜப்பான் தேசம் நெல்லை விளைவித்து தன் தேசத் தேவைக்கு மேற்பட்டுக் கிடப்பதை இந்தியத் துறைமுகங்கட்கு ஏற்றுமதி செய்திருக்கிறதென்றால் நிலைமை எப்படி யிருக்கிறதென்பது ஒருவாறு விளங்கும்.

சமீபத்தில் ஜெர்மன் தேசத்தில் இறக்குமதியாகும் இந்திய அரிசிக்கு இறக்குமதி வரியை அதிகப்படுத்தித் தடுத்திருக்கின்றனர். இதன் பயனாக இந்திய அரிசி ஜெர்மனியில் இனிமேல் தலை காட்டமுடியாதென்று தெரிகிறது. அரிசிக்கு இதுகாறு மிருந்த வெளிநாட்டுத் தேவை ஒழிந்தால் இந்தியாவில் விளையும் அரிசி முழுமையும் இந்தியாவிலேயே செலவாகவேண்டும். அப்படியானால் அது ஒரு வியாபாரப்பொருளாகக் கருதப்பட்டு லாபந்தருவதாக இராதென்பது நிச்சயமன்றோ? இந்த நிலைமையை அரசாங்கத்தார் நன்கறிவர். நெல்—அரிசி விலையேறுவதற்கும் லாபந்தருவதற்கும் மார்க்கமில்லை யென்பது தெரிந்த பிறகு செய்யவேண்டிய தென்ன? வரிகள் குறைக்கப்பட வேண்டும். இவ்வகையில் அரசாங்கத்தார் காலந் தாழ்த்தாது செய்யா விடில் குடிகள் வறியவர்களாகிப் பிச்சைக்காரர் மலியும் படியான நிலைமையையே கொண்டுவந்து விடும். சிலநாளில் ஜமீன்தார்களும் நிலச்சுவான்தார்களும் பாப்பராகி விடுவர்.

மேட்டூர் அணைகட்டித் தஞ்சைஜில்லாவில் செய்யப்பட்டிருக்கும் பாசன அபிவிருத்தித்திட்டம் அமுலுக்குவரும் போது பயிர்த்தொழில் பட்டுவருவது ஒரு வேடிக்கையான நிலைமையல்லவா! கோடிக்கணக்கான பொருள் வாரிவீசி எறியப்பட்டுவிட்டது உள்ளபடியே அத்திட்டம் வெற்றியளிக்குமா தோல்வி தருமா என்று காண்பதற்கு முன் பயிர் செய்யவே வசதியற்றுப் போகும்படி விலைவாசிகள் வீழ்ந்து நிற்கின்றன. இது தொருபுறமிருக்க தீர்வை யேற்படுத்தியிருக்கும் ஜமீன்களில் வாரம் பெறும் முறையை அமுலுக்குக் கொண்டுவரும் படி முயற்சி செய்தல் வேண்டும். குடி ஜனங்கள் எழுந்து, வரிக்கொடுக்கும் முறையை எதிர்த்து ஜமீன்தார்களுடன் போராடவேண்டும். விலையேறி யிருந்த காலத்தில் ஏற்பட்ட வரிமுறை இப்போது அமுலிலிருப்பது சகிக்க முடியாக் கொடுமையாகும். வாரம் வழங்கும் முறையே இன்றைய நிலையில் நியாயமானதாகும். இன்னும் பலவிடங்களில் இம்முறை இருந்து வருகிறது. வரி ஏற்பாடுள்ள விடத்தில் அதனை [illegible] முறையாக்க முயலுதல் விவசாயிகட்கு ஓரளவு நன்மை பயப்பதாகும். இல்லாவிட்டால் விவசாயிகள் ஏழையாகிக் கலவரத்திலும் பிச்சைக்காரத் தனத்திலுமே முடியக்கூடுமென்பதை ஜமீன்தார்களும் நிலச் சொந்தக்காரரும் உணர்தல் வேண்டும்.

### லங்காஷயர் மீது பாணம்,

லங்காஷயர் பஞ்சாலைகளுக்கு மற்றொரு வீழ்ச்சி "கண்டம்" வந்திருக்கிறது; சீனர்கள் தங்கள் நாட்டில் பெரிய பஞ்சாலைகளை, நெசவுச்சாலைகளை நிறுவத்தீர்மானித்து விட்டார்கள். இதற்காக ஏராளமான இயந்திரங்கட்கு இங்கிலாந்துக்கு ஆர்டர் கொடுக்கப்பட்டு விட்டது. மிஸ்டர் ஹாரோல்டு பிரிக்ஸ் என்ற நெசவு நிபுணர் சீனா செல்வார். சீனா இதுகாறும் லங்காஷயரின் முக்கிய மார்க்கட்டுகளில் ஒன்றாயிருந்தது. ஏற்கெனவே துருக்கியும் எகிப்தும் தங்கள் தங்கள் ஆலைகளைக்கட்டத் தொடங்கி விட்டன.

### உலக சமாதானம்
### இந்திய அமைதி,

மிஸ்டர் லான்ஸ்பரி ஒரு ரேடியோ பிரசங்கத்தில் கூறியதாவது:—டகையினாலும் மிருக அடக்கு முறையினாலும் ஆளமுடியாது. ஒத்துழைப்பே ஆட்சியின் இரகசியம். இதனை நாம் எங்கும் கையாடவேண்டும். உலக சமாதானம் வேண்டுமானால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கீழ் சமாதானம் வேண்டும். ஆகவே இந்தியாவையும் தென் ஆப்ரிக்காவையும் இதர தேசங்களையும் நமக்குச் சமமாக நினைக்கவேண்டும்.

### பர்மாவுக்கு தம்பதிகள் பிரயாணம்.

(நமது நிருபர்)

இராமசந்திரபுரத்தில் பிரபல குடும்பத்தைச் சேர்ந்த தீ. சொ. தீ. சொ. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் தமது மனைவியாருடன் கல்கத்தா மார்க்கமாக ரங்கூனுக்குப் புறப்பட்டுச் சென்றிருக்கிறார். தனவணிக சமூக சீர்திருத்தம் வேண்டுவோரில் அன்பர் சொக்கலிங்கமும் ஒருவராவர். அவரது மனைவியார் ஸ்ரீமதி வள்ளியம்மை ஆச்சி அவர்கள், கானாடுகாத்தான் ராவ்பகதூர் சபாரத்னம் செட்டியாரவர்களின் சகோதரியாராவர்.

### மனைவியுடன் பிரயாணம்.

(ஒரு நிருபர் தந்தி)

ரங்கூன் நவம்பர் 20

இராமச்சந்திரபுரம் திருவாளர் தீ. சொ. தீ. சொ. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் தமது மனைவியாருடன் இன்று சுகமாக வந்து சேர்ந்தார்கள்.

### சென்னை ஹோம் மெம்பர் பதவி.

புதியடில்லி, நவ 20—

இந்தியா சட்டசபைக் கூட்டத்துக்காக தென்னிந்தியாவிலிருந்து வந்துள்ள அங்கத்தினர்கள் சென்னைக் கவர்ன்மெண்டின் ஹோம் மெம்பர் பதவியைப்பற்றி பலவிதமாகப் பேசுகிறார்கள். லார்ட் விலிங்டன் நான்குமாத ரஜாவில் இங்கிலாந்து சென்றால் சென்னைக் கவர்னர் ஸர் ஜார்ஜ் ஸ்டான்லி கவர்னர் ஜெனரலாக ஆக்ட் செய்ய நேரிமாகையால் அப்போது சென்னைக் கவர்னர் பதவியை இடைக்காலத்தில் வகிப்பது யார் என்ற விஷயமாகவும் இங்கு பேச்சு நடக்கிறது. ஆனால் இது சம்பந்தமாக இதுவரை ஒரு சம்பிரதாயமும் அநுஷ்டானத்துக்கு வந்ததில்லை. சென்னைக் கவர்ன்மெண்டு நிர்வாக சபையில் சீனியர் அங்கத்தினராக விருக்கும் ஸர் முகமது உஸ்மான் ஸர் ஜார்ஜ் ஸ்டான்லியின் பதவியிலிருந்து ஆக்ட் செய்ய வேண்டுமெனச் சொல்லப்படுகிறது. ஸர் ஏ. காம்பெல் பெயரும் இது சம்பந்தமாக அதிகமாக பிரஸ்தாபிக்கப்படுகிறது. ஆகவே இவ்விருவரில் யார் ஆக்டிங் கவர்னராக நியமிக்கப்படுவார்களோ தெரியவில்லை. இந்த சந்தர்ப்பத்தில் படித்த நிந்த முஸ்லிம்களில் ஒரு சாரார் ஸர் முகம்மது உஸ்மானின் உத்தியோக காலத்தை இனியும் நீடிக்கச் செய்யக் கூடாதென அபிப்பிராயப் படுவதாகவும் தெரிகிறது. மற்ற முஸ்லீம்களின் உரிமைகளை அவர்கள் பலமாக வற்புறுத்தி வருகிறார்கள். எப்படியும் ஒரு கொள்கையை முன்னிட்டு ஸர் முகம்மது உஸ்மானின் உத்தியோக காலத்தை நீடிக்கச் செய்யக் கூடாதென்றே அவர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். சென்னையில் கூடிய முஸ்லீம் மகாநாட்டிலும் லார்ட் விலிங்டன் சென்னைக்கு விஜயஞ் செய்கையில் பிரதிநிதிகள் அவரைக்கண்டு இவ்விஷயத்தைப் பிரஸ்தாபிக்க வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஸர் முகம்மது உஸ்மானுக்குப்பின் ஹோம் மெம்பர் பதவியில் யாரை நியமிப்பதென்ற விஷயமும் ஆலோசனையில் இருக்கிறது. இது சம்பந்தமாக இங்கு நான்கு முஸ்லீம் அங்கத்தினர்களின் பெயர் விசேஷமாகப் பிரஸ்தாபிக்கப்படுகிறது.

கான்பகதூர் கலிபுல்லா, ஜனுப் முகம்மது முஸ்லாம், கான்பகதூர் யாக்யா அலி, சையத் முகம்மது பாட்சா ஆகிய நான்கு பெயர்கள் பிரஸ்தாபத்திலிருக்கின்றன. இவர்களில் இருவர் மாகாண சட்டசபை அங்கத்தினர். ஒருவர் இந்தியா சட்டசபை அங்கத்தினர். மற்றொருவர் ராஜாங்கசபை அங்கத்தினர். சென்னைக் கவர்ன்மெண்டார் தாழ்ந்த வகுப்புப் பிரதிநிதிகளில் ஒருவரை ஹோம் மெம்பர் பதவியில் நியமிப்பார்கள் என்று நினைக்க இப்போது போதிய ஆதாரமில்லை. அதோடு கவர்ன்மெண்டாரின் எண்ணம் எவ்வித மிருக்கிறதென இப்போது சொல்லவும் முடியாது. கவர்ன்மெண்டார் இவ்விஷயத்தைப்பற்றி யோசித்து வருகிறார்கள் என்பதமட்டும் நிச்சயம். சீக்கிரத்தில் இது சம்பந்தமாக ஒரு முடிவு செய்வார்கள்.

## அமெரிக்கா

### சோவியத் ஆட்சியை அங்கீகரித்தது.

சோவியத் ருஷ்ய கவர்ன்மெண்டை யுனைடட்ஸ்டேட்ஸ் அங்கீகரித்து ருஷ்யாவுக்கு ஒரு ஸ்தானாதிபதியை அநுப்பவும் தீர்மானித்து விட்டதாக பிரஸிடண்டு ரூஸ்வல்டு அறிவித்திருக்கிறார். மிஸ்டர் வில்லியம் புல்லிட் முதலாவது அமெரிக்க ஸ்தானாதிபதியாக ருஷ்யாவுக்குச் செல்வார். மிஸ்டர் லிட்வினுப் (ருஷ்ய அன்னியநாட்டு மந்திரி) இன்னும் பல தினங்கள் அமெரிக்காவில் தங்கி பல விஷயங்களைப்பற்றி விவாதிப்பார். ருஷ்யாவிலுள்ள அமெரிக்கப் பிரஜைகளுக்குப் பூரா மத சுதந்திரம் அளிக்கப்படுவது ஒப்பந்தத்தின் ஒரு நிபந்தனையாகும். சோவியத் ருஷ்யாவை யுனைடட் ஸ்டேட்ஸ் அங்கீகாரம் செய்து விட்டதுபற்றி மாஸ்கோவில் மிகுந்த திருப்தியுண்டாகி யிருக்கிறது. சோவியத் ருஷ்யாவுடன் இனி நெருங்கிய சம்பந்தம் ஏற்படுவதால் 1200 முதல் 1500 லட்சம் டாலருக்கு ருஷ்யாவுடன் அமெரிக்கா வியாபாரம் செய்ய முடியுமென்று நம்பப்படுகிறது. 5200 லட்சம் டாலர்வரை வியாபாரம் நடக்கக் கூடுமென்று மிஸ்டர் ப்ருக்ஹார்ட் என்ற நிபுணர் அபிப்பிராயப்படுகிறார். அமெரிக்காவுக்கு இவ்வொப்பந்தத்தால் கொஞ்சம் நன்மை யுண்டென்று ஜெனரல் டாஸ—ம் அபிப்பிராயப் படுகிறார். ஆனால் அமெரிக்காவின் மேலான நன்மைக்கு இது விரோதமென்று செனேடர் ராபின்ஸன் கருதுகிறார். இரு தேசங்களும் பரஸ்பரம் ஒருவரை யொருவர் தாக்கிப் பிரசாரம் செய்வதை அனுமதிப்பதில்லை யென்றும், பூரா மதசுதந்தரம் அளிப்பதாகவும் ஒப்பந்தத்தில் ஷரத்துகள் ஏற்பட்டிருக்கின்றன.

#### ஜெப்பானுக்கு விரோதம்.

ருஷ்ய—அமெரிக்க ஒப்பந்தத்தால் அமெரிக்காவுக்குப் பொருளாதாரத் துறையில் அனுகூலமெதுவும் ஏற்படாதென்றும், ஸைபீரியாவில் ஜெப்பான் வரவர ஆக்ரமிக்க முயன்றுவருவதைப்பற்றி பிரஸிடண்டு ரூஸ்வல்டிக்கு ஏற்பட்ட கவலையே இந்த ஒப்பந்தத்திற்கு காரணமென்றும் "லடைம்ஸ்' பத்திரிகை எழுதுகிறது.

### அமெரிக்காவுக்கு ருஷ்ய ஸ்தானாதிபதி

மிஸ்டர் எம். டிராவனேஸ்கி ருஷ்யாவின் ஸ்தானாதிபதியாக அமெரிக்காவுக்கு அனுப்பப்படுவார். அமெரிக்க கவர்ன்மெண்டும் இவருடைய நியமன யோசனையை அங்கீகரித்துவிட்டது.

### பழனியப்ப செட்டியாரின் மரணம்

கோலாலம்பூர், நவம்பர், 14—

பஹாங்ஜில்லா கோலாலிபிஸில் கடை வைத்திருக்கும் ஸ்ரீ பழனியப்பசெட்டியார், சென்ற வாரம் தனது கடையில் திடீரென நோயுற்றார். அவரை உடனே ஜில்லா ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்று சிகிச்சை செய்தும் பிரயோசனப்படாமல் ஆஸ்பத்திரிக்குச் சென்ற அரை மணி நேரத்திற்குள்ளாக இறந்து போனார். போலீஸ் அதிகாரிகள் முன்னிலையில் டாக்டர் எம். பி. ஒகானரும், டாக்டர் பி. கே. மேனனும் செட்டியார் பிரேதத்தை பரிசோதனை செய்ததில், அவர் விஷமுண்டு மரணமடைந்ததாக முடிவுசெய்தனர். பிரேத விசாரணைக்குப்பின், கோலாலிபிஸில், பிரேதத்தை அடக்கம் செய்தனர். போலீஸ் விசாரணை நடந்து வருகிறது. செட்டியார் விஷமுண்டு மரணமானதின் மர்மம் என்னவென்று இன்னும் திட்டமாய்த்தெரியவில்லை.



## காந்திஜீ சுற்றுப்பிரயாணம்.

#### பணமுடிப்பில்லை.

காந்திஜீ 15ந் தேதி அம்ரோடிக்கு சமீபமுள்ள வன் என்ற விடத்திற்குச் சென்றார். அவ்விடத்தில் தான் திரு. ஆனே பிறந்தார்: அங்குள்ள ஜனங்கள் காந்திஜீக்கு ஒரு உபசாரப்பத்திரம் நல்கினர். இதில் சமீபத்தில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கை விரித்து அதனால் ஏற்பட்ட நஷ்டத்தை முன்னிட்டு பணமுடிப்புக் கொடுக்க முடியவில்லை யென்றனர். அதுபற்றி காந்திஜீ பேசும் போது பணமுடிப்பு கொடுக்காதது தப்பிதமென்றும் பணமுடிப்பு சவர்ணர் ஹரிஜனங்கட்கு இழைத்த பாதகத்திற்காகக் கொடுக்கும் அபராதத் தொகையென்றும் குறிப்பிட்டார்.

#### வெள்ளிப்பேழை ஏலம்.

அடுத்தநாள் அங்கிருந்து 67 மைல் தூரமுள்ள யோத்மால் போய்சேர்ந்தார். 15 ஆயிரம் பேர் கொண்ட ஒரு கூட்டம் நடைபெற்றது. 1001 ரூபாய் பணமுடிப்புக் கொடுக்கப்பட்டது. உபசாரப்பத்திரமளித்த வெள்ளிப் பேழையும் பிறவும் ஏலத்திற்கு விடப்பட்டது.

#### அமெரிக்கா பிரயாணம்.

காந்திஜீ அமெரிக்காவுக்குப் போகப் போகிறார் என்று வெளியான செய்தி சம்பந்தமாகக் கேட்டதில் அது பொய் வதந்தியென்றும் தம் உடல் நிலை சம்மதியாதென்றும், ஏப்ரல் வரையிலும் ஹரிஜனவேலையையே கவனிப்பாரென்றும் கூறினார்.

#### சிவன்கோவில் திறக்கப்பட்டது.

காந்திஜீ லாகூர் வந்தபோது திரு. விஷ்ணுதாஸ் உதாசி என்ற வக்கீலின் நிர்வாகத்திலிருந்த ஒரு சிவன்கோவில் ஹரிஜனங்கட்குத் திறந்துவிடப்பட்டது.

#### கறுப்புக்கொடி ஊர்வலம்.

அகோலாவில் சில சநாதனிகள் கறுப்புக்கொடி ஊர்வலம்நடத்தினார்கள். 12 யுவர்கள் காந்திஜியின் மோட்டார் முன்பு படுத்து சத்யாக்கிரஹம் செய்ய யத்தனித்தார்கள். அங்கு நடந்த பொதுக்கூட்டத்தில் இந்த இரண்டு சம்பவங்களையும் காந்திஜி குறிப்பிட்டு, சநாதனிகள் பொதுஜனங்களைத் தங்களுடைய அபிப்பிராயங்களுக்கு மாற்ற உரிமைபெற்றிருக்கையில், கறுப்புக் கொடிபோன்ற நடவடிக்கைகளைக் கைக்கொள்வது சரியல்லவென்று கூறினார். போலீஸாரைத் தாம் உதவிக்கழைக்கப் போவதில்லை யென்றும், அதனால் ஏற்படும் கஷ்டங்களை அனுபவிக்கத் தயார் என்றும், வாலண்டியர்கள் கருப்புக் கொடிக்காரர்களிடம் முரட்டுத்தனமாக விருக்கக் கூடாதென்றும் அவர் கூறினார்.

# விளம்பரம்.

இராமநாதபுரம் கவர்மெண்டு தலைமை ஸ்தல ஆஸ்பத்திரிக்கு 1934—35 வருஷத்துக்கு வேண்டிய ஆகாராதி சாமான்களும் இதர சாமான்களும் சப்ளை செய்வதற்காக டெண்டர்கள் (இரண்டு) ஷெ இராமநாதபுரம் கவர்மெண்டு ஸ்தல ஆஸ்பத்திரி சூப்பிரண்டெண்டாரால் 1934-ஹூ ஜனவரிமீ 4உ வியாழக்கிழமை பகல் 2-மணி வரையில் ஏற்றுக்கொள்ளப்படும். மற்ற விபரங்களுக்கு, ஷெ இராமநாதபுரம் கவர்மெண்டு ஸ்தல ஆஸ்பத்திரி சூப்பிரண்டெண்டாருக்கு எழுதவும்.

N. Narayanaswami Iyer,
Superintendent
Govt. Head Quarters,
Hospital, RAMNAD.
20—11—33

## கட்டுரைப் போட்டி,

ஹிந்து மாதர்கள் கட்டாய விதவையாக்கப்பட்டிருப்பதால் ஏற்படும் துன்பங்களையும், திரும்பவும் கல்யாணம் செய்யப்படுவதால் ஏற்படும் நலன்களையும் இன்னும் அது சம்பந்தமான விஷயங்களையும் விளக்கித் தமிழ்க் கட்டுரை முதல்தரமாக எழுதுபவர்க்கு ரூ. 10/- பரிசளிக்கப்படும்.

நிபந்தனைகள்:

1. கட்டுரை கையெழுத்தில் புல்ஸ்காப் 8 பக்கங்கட்குக் குறையக்கூடாது.
2. ஸ்ரீமுக கார்த்திகை 25உக்குள் அனுப்பப்பட வேண்டும்.
3. பரிசுபெற்ற கட்டுரை குமரனில் வெளியிடப்படும். பின்னர் புத்தக ரூபமாகவும் அச்சிட்டு வெளியிடப்படும்.
4. பரிசுக்காக அனுப்பப்படும் கட்டுரைகள் சொந்தக்காரருக்குத் திருப்பியனுப்பப்படமாட்டா. அக்கட்டுரைகளின் உரிமை சங்கத்தைச் சேர்ந்தது.
5. கட்டுரைகளைப் பரிசீலனை செய்ய மூன்று ஜட்ஜுகள் நியமிக்கப்பெறுவர்.
6. கட்டுரை யெழுத எந்த ஜாதியாருக்கும் உரிமையுண்டு. ஒரு ஜாதியாரைப்பற்றி யெழுதவேண்டுமென்பது கட்டாயமில்லை. ஹிந்து சமூகத்தைப் பற்றிப் பொதுவாகக் கட்டுரை இருக்கலாம்.

காரியதரிசி,
**மாதர் மறுமண சகாய சங்கம்,**
காரைக்குடி.

### அகில ஜெர்மனியருக்கும் ஒரேமாதிரி உடை,

ஸர்வ கலாசாலை ஆசிரியர்கள் முதல் செருப்புத் தைப்போர் வரையில் எல்லாரும் இனி வெள்ளை உள் சட்டை, காலர், ராணுவக்குல்லாய், கறுப்பு டை, நீலவர்ணம் வாய்ந்த ஒரு வகையான கறுப்பு உடை முதலியவை அணிந்து செல்லும்படியாக சீக்கிரத்தில் உத்தியோக முறையில் உத்தரவு பிறப்பிக்கப்படுமென்று கூறப்படுகிறது.

### தபால்காரரைக் காணோம்.

ராமநாதபுரம் ஜில்லா செவல்பட்டியில் உள்ள தபாலாபீஸைச் சேர்ந்த தபாற்காரர் மணியார்டர், இன்ஷூர் கவர் முதலியவைகளைக் கொண்டு 9-ந் தேதி வெளியில் போனவர் திரும்பவில்லையென்றும் போலீஸாரும் தபாலாபீஸ் அதிகாரிகளும் இது விஷயமாக விசாரித்து வருகிறார்கள் என்றும் தெரிகிறது.

### பிரிட்டன்—ஐயர்லாந்து பொருளாதாரப் போராட்டம்.

பிரிட்டனுக்கும் ஐயர்லாந்துக்குமுள்ள பொருளாதார சச்சரவுகளை நீக்க ஒருவழி கண்டுபிடிக்குமாறு கார்டினர் பக்ராகியின் தலைமையில் ஒரு சர்வகக்ஷி மகாநாடு டப்ளினில் கூட்டப்பட்டது. அதில் ஸ்ரீ டிவாலராவும் அவரது சர்க்காரும் சேரவில்லை.

### காரைக்குடி—மதுரை நேரான ரயில்வண்டி

நவம்பர் 18ந் தேதி கூடிய ரயில்வே ஆலோசனைக் கமிட்டி காரைக்குடிக்கும் மதுரைக்கு மிடையில் பஸ் போக்குவரத்துடன் பலமாய்ப் போட்டி போடுவதற்காகத் துரிதமாய்ச் செல்லும் நேரான ரயிலொன்றை விடத் தீர்மானித்தது.

### புதுக்கோட்டை சட்டசபை.

புதுக்கோட்டை நவம் 21—

புதுக்கோட்டை சமஸ்தான சட்டசபை நேற்று மிஸ்டர் ஹோல்ட்ஸ்வொர்த் தலைமையில் கூடியது. இராஜப்பிரதிநிதி தமது சுற்றுப்பிரயாணத்தில் புதுக்கோட்டையையும் சேர்த்துக் கொண்டிருப்பது பாராட்டத்தக்க தென்றும், அதற்காக இராஜப்பிரதிநிதிக்கு நன்றி செலுத்துவதாகவும், பிரஜைகளின் ராஜவிஸ்வாசத்தையும் தெரிவித்துக் கொள்ளுவதாகவும், ஒரு தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. பிறகு கேள்விகள் சிலவற்றிற்கு பதிலளிக்கப்பட்டது. 1933-ம் வருஷம் ஏப்ரல்மாதம் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களைப்பற்றி கவர்ன்மெண்டார் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளைக் குறிக்கும் அறிக்கை யொன்று சபையில் ஆஜர் செய்யப்பட்டது.

விலை வாசி குறைந்திருப்பதால் விவசாயிகளுக்குக் கஷ்டம் நேர்ந்திருப்பதைக் கவனித்து அவர்களுக்கு வசதி தேட இச்சபையின் உத்தியோகஸ்தரும் உத்தியோகப் பற்றற்றவரும் அடங்கிய ஒருகமிட்டி நியமிக்கப்பட வேண்டுமென கவர்ன்மெண்டுக்குச் சிபார்சு செய்வதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தெரிந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர் ஒருவர் கமிட்டியின் பரிசீலனைக்கு இவ்விஷயத்தை விடுவதென்றால் அது விஷயத்தைத் தள்ளிப்போடுவதற்கு ஒப்பாகு மென்றார். ரெவினியூ இலாகா, காட்டிலாகா, கலால் இலாகா, ஆகிய மூன்றையும் ஒன்றாகச் சேர்க்கக் கூடாதென்ற ஒரு தீர்மானம் பிறகு நிறைவேற்றப்பட்டது: இத்தீர்மானம் ஸ்ரீமான் முத்துஸ்வாமி வல்லத்தரசால் கொண்டு வரப்பட்டது: கவர்ன்மெண்டார் இது விஷயத்தில் எப்பக்கத்திலும் ஓட் கொடுக்காமல் நடு நிலைமை வகித்துவிட்டனர்.

### தங்கம் வெள்ளி

சென்னை, நவம்பர் 22—

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத்தங்கம் | 32 | 1 | 0 |
| மூஸா தோலா 1-க்கு | 32 | 3 | 0 |
| சவரன் மொத்தம் | 20 | 8 | 0 |
| சவரன் சில்லரை | 20 | 8 | 0 |
| வெள்ளி ரூபா 100 எடை | 57 | 4 | 0 |
| ஷெ ரூபா எடை | 0 | 9 | 6 |

லண்டன், நவம்பர் 21—

| | | | |
|---|---|---|---|
| தங்கம் அவுன்ஸ் | ப. | ஷி. | பெ. |
| ஒன்றுக்கு | 6 | 7 | 0 |

வெள்ளி அவுன்ஸ் ஒன்றுக்கு 18¼ பென்ஸ்

### ரப்பர் விலை.

லண்டனில் புகைபோட்ட ரப்பர் ஷீட் பின்கண்ட தேதிகளில் பின்கண்டபடி வாங்குபவர் விலை இருந்திருப்பதாகத்தெரிகிறது.

நவம்பர்
16 நாலே வீசரைவீசம்.
17 நாலே அரைக்கால்.
18 ஷெ
20 நாலே அரைக்காலுமரைவீசம்.
21 நாலே அரைக்கால்

### சிலோன் தேயிலை.

லண்டன், நவம், 21—

| | |
|---|---|
| காமன் பெகோ | 11¼ |
| ஷெ புரோக்கன் | 11¼ |
| ஷெ ஆரஞ்சு பெகோ | 13¼ |
| ஷெ புரோக்கன் | 12¼ |

### ரப்பர் இருப்பு.

லண்டன் நவம்பர் 20—

லண்டன் மொத்த ரப்பர் ஸ்டாக் 36,443டன். நவம்பர் 13ந்தேதி இருப்பு 36,831 டன். நவம்பர் 18-ந்தேதியோடு முடிவான வாரத்தில் செலவான ரப்பர் 961 டன். அதற்கு முந்திய வாரத்தில் 885 டன் செலவாயிற்று.

லிவர்பூல் ஸ்டாக் மொத்தம் 52,466 டன். ஒருவாரத்திற்கு முந்திய ஸ்டாக் 52,910. சென்ற வாரத்தில் செலவான ரப்பர் 638 டன். அதற்கு முந்திய வாரத்தில் செலவான ரப்பர் 464 டன்.

### சைகோன்.

(ஆகாயத்தபால்.)

நவம்பர் 18—

| | |
|---|---|
| செய்கோன் வெள்ளி 1க்கு இந்தியா ரூ. | 158-6-0 |
| ஷெ 1க்கு மலாய் வெள்ளி | 101-12½ |
| நெல்விலைபிக்கல் 1க்கு-1-30முதல்1-35 | |

### காரைக்குடி நகரத்தார் கூட்டம்.

காரைக்குடி நகரத்தார்கள் நாளது கார்த்திகை மீ 6உ (21—11—33) மாலையில் அறுபத்து மூவர் மடத்தில் கூடினார்கள். அக்கூட்டத்தில் பின்வரும் தீர்மானங்கள் நிறைவேறின:—

1: இக்கூட்டம் காரைக்குடி பெஞ்சு கோர்ட்டில் காலியாகும் நகரத்தார் ஸ்தானத்திற்கு நகரத்தார் சமூகத்தில் ஒருவரை நியமிக்க வேண்டுமென்று அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்ளுகிறது.

2. மூன்று வருஷங்களுக்கு முன் நகரத்தார் மெம்பர் ஷெ பெஞ்சு கோர்ட்டில் ஆறுபேர் இருந்ததைத் திரும்பவும் ஆறுமெம்பர்கள் வரவேண்டியதற்கான முயற்சி எடுத்துக் கொள்ளும்படி சென்னை நாட்டுக்கோட்டையார் சங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறது.

3. இத்தீர்மானங்களை சென்னை யரசாங்கத்தாருக்கும் மகா-ா-ா-ஸ்ரீ சப் கலெக்டருக்கும் சென்னை நாட்டுக்கோட்டையார் சங்கத்திற்கும் அனுப்பும்படி தீர்மானிக்கிறது. ஒரு நிருபர்.

## சிவகெங்கை.

(நமது நிருபர்)

சூதாடின நபர்கள் பிடிபட்டனர்:— இவ்வூரில் வலையர் குடியிருப்புக்குப் பின்புறம் மானுமதுரைக்குப் போகும் பப்ளிக் ரோட்டிற்குச் சமீபம், சீட்டில் பணம்வைத்துச் சூதாடின நபர்கள் எட்டுப்பேர்; 17-11-33-ந் தேதி காலை 11-45 மணிக்கு கஸ்பா, சப்இன்ஸ்பெக்டர் கனம் R. S. கிருஷ்ணசாமி அய்யர் அவர்களால் பிடிக்கப்பட்டு அரஸ்டுச் செய்யப்பட்டனரென்றும் மற்றும் அதேதினத்தில் ஷை சூதாடின நபர்கள் சார்ஜ் செய்யப்பட்டு இவ்வூர் தாலூகா மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் விசாரணை நடந்ததில், ஷை சூதாடின நபர்கள் ஒவ்வொருவருக்கும் பத்து ரூபாய் அபதாரம் போடப்பட்டதென்றும், தவறினுல் பத்து நாள் ஜெயிலிலிருப்பதாகவும் விதிக்கப்பட்டதென்றும் தெரிய வருகிறது.

சூதாடின வேறொரு நபரின் கதி:— 18-11-33-ந் தேதி 11 மணிக்கு இவ்வூர் சப் இன்ஸ்பெக்டர் அவர்கள், நாட்டரசன் கோட்டைப் பக்கம் பப்ளிக்ரோட்டில் சீட்டுவைத்துச் சூதாடிக் கொண்டிருந்த கோபால் பிள்ளை என்பவரை அரஸ்டுச் செய்து, இவ்வூர் தாலூகா சப்மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் ஷை நபரை ஆஜர்படுத்தி விசாரணை நடத்தியதில் ஷை சூதாடிய நபருக்கு பத்துநாள் வரை ஜெயிலிலிருக்க விதித்ததாகத் தெரிய வருகிறது.

நமது மேன்மை தங்கிய இராஜப்பிரதிநிதி அவர்களின் 'பிரயாணம்.—மேன்மை தங்கிய இராஜப்பிரதிநிதி அவர்கள் சிவகெங்கை தாலூகா மூலம் ரெயில் மார்க்கமாய் வருகிற டிசம்பர்மாதம் பிரயாணம் செய்வதை முன்னிட்டு சிவகெங்கை தாலூகா கவர்ன்மெண்ட் தாசில்தார் கிராம ஹெட்மன்களுக்கு உத்திரவு பிறப்பித்திருப்பதாகத் தெரிகிறது. அந்த உத்திரவின்படி கிராமங்களின் தலையாரிகள் ஒவ்வொருவரும் சாக்கார்வில்லை (badge) யுடன் ஒரு தடிக்கம்பு, அல்லது லாத்தி ஒரு கடப்பாரை அல்லது மண்வெட்டி, ஒரு லாந்தல் சகிதம் டிசம்பர் மாதம் 9ம்தேதிமுதல் 12 முடிய ரெயில் பாதையை பந்தோபஸ்து செய்வதற்காக குறிப்பிட்ட அந்தந்த ஸ்டேஷன்களில் ஏற்பட்ட சப் இன்ஸ்பெக்டர்கள் சொல்லுகிற பிரகாரம் நடக்கும்படியாகத் தெரியவருகிறது.

சுயமரியாதை மகாநாடு:—டிசம்பர் 2, 3 தேதிகளில் கமலாம்பிகா சென்ட்ரல் டவுன் ஹாலில் நடைபெறுமாறு ஏற்பாடுகள் நடத்தப் படுகின்றன. 'ராஷனலிஸ்ட்' ஆசிரியர் எஸ். ராமநாதன் M. A. B. L. தலைமை வகிப்பார். வாலிபர் மகாநாட்டுக்கு புதுக்கோட்டை கே. முத்து சாமி வல்லத்தரசு B. A. B. L. தலைமை வகிப்பார்.

---

## கொப்பனுபட்டி.

(ஒரு நிருபர்)

மாணிக்க வாசக வித்தியாசாலை மாணவர் கழகம்:—இக்கழகச் சார்பாக இவ்வாண்டின் மூன்ருவது கூட்டம், நாளது கார்த்திகைத் திங்கள் 2உ (17-11-33) வெள்ளிக்கிழமை காலை 10—30 மணிக்கு ஷை வித்தியாசாலை; பிரதம உதவியாசிரியர் திருவாளர் K. R. பழனியப்ப முதலியார் அவர்கள் தலைமையில் கூடிற்று. கடவுள் வழிபாடும்; தலைவர் முன்னுரையும் நிகழ்ந்தபின்; முயற்சியின் முதன்மை" "உண்மையின் உயர்வு" 'அன்புடைமை" உடற்பயிற்சியும் வலிமையும்" "சுகம்" "சிபியும் புருவும்" என்னும் பொருள்களைப்பற்றி முறையே, A. கதிரேசன். S. P. சிவலிங்கம், A. R. சுப்பையன், S. R. M. வள்ளியப்பன்; S. P. பழனியப்பன் முதலிய மாணவர்கள் சொற்பெருக்காற்றினர்கள். பின்னர்; புதுப்பட்டி; சேக்கிழார் செந்தமிழ்க் காலாசாலை ஆசிரியர்கள் திருவாளர் K R இராமகிருஷ்ண முதலியார், திருவாளர் T. N. தங்கவேலு முதலியார் முதலியோர்களும்; கம்பை (Kambe) ஸ்கூல் பழைய மாணவரும், இவ்வூர் "Vivekananda Troop" இன் உதவிச் சாரணசிரியருமான பூலாங்குறிச்சி, திருவாளர் இராம. சோமசுந்தரம் செட்டியார்அவர்களும்; "மாணவர் தினசரிக்கடமையும் ஒழுக்கமும்" என்னும் பொருள்பற்றி அரிய சொற்பொழிவாற்றி; மாணவர்களை உற்சாகப் படுத்தியதற்கு இக்கழகம் பெருவகையுடன் நன்றிபாராட்டுகின்றது. பின், தலைவர் தம் முடிவுரையில் மாணவர்களின் முற்போக்குக்கு அவர்கள் கவனிக்க வேண்டிய விஷயங்களையும், அநுசரிக்க வேண்டிய விதிகளையும் பற்றிக் கூறியதும் கூட்டம் வந்தனோபசாரத்துடன் அரச வாழ்த்துக் கூறப்பட்டு இனிது கலையப் பெற்றது.

# கடிதங்கள்.

## கொ. லெட்சுமிபுரம்.

(ஒரு நிருபர்)

ஸ்ரீ மீனுக்ஷி சங்கத்தின் எட்டாவது ஆண்டு ஏழாம் மாதக்கூட்டம் நாளது ஸ்ரீமுக ஆண்டு ஐப்பசித்திங்கள் 30 ம் நாள் பிற்பகல் 4 மணிக்கு சொ. வி. உதவி ஆசிரியர் திரு. S. அருணுசலம் பிள்ளையவர்கள் தலைமையில் மாணவர் கடவுள் வாழ்த்துப்பாட இனிது ஆரம்பமாயிற்று. அஞ்ஞான்று சொ. வி. மாணவர் சா. வீரப்பன், மு. லெக்ஷ்மணன். ச. நடராஜன் ரெ. நடராஜன், மு. சுப்பிரமணியன், கண. முத்து. வெ. லெக்ஷ்மணன், அண. முத்து, மாணவி மு. அன்னபூரணி முதலியோர் "கோகலே" என்னும் பொருள் பற்றி பிரசங்கம் செய்தனர். தலைமை ஆசிரியர் திரு. அ. இராமாநுஜா சாரியாரவர்கள் ஒரு சொற்பொழி வாற்றினர்கள். தலைவரவர்கள் தகுந்த முடிவுரை பகர்ந்ததும் நாட்டுவாழ்த்துப் பாடப்பெற்றுசபை இனிது நிறைவெய்தியது.

---

## கோட்டையூர்.

(ஒரு நிருபர்)

தேவகோட்டை சப்கலெக்டருக்கு விருந்து:—பாலக்காட்டுக்கு மாற்றப்பட்டிருக்கும் தேவகோட்டை சப்கலெக்டர் ஸ்ரீமான் J. P. லாவர்டோ I. C. S. அவர்களுக்கு கோட்டையூர் ஸ்ரீமான் ராவ்பகதூர் கவீ. அழ. ராம. ராமநாதன் செட்டியாரவர்கள் தனது பங்களாவில் 16-11-33ம் தேதி வியாழக்கிழமை இரவு 8 மணிக்கு ஒரு உபசார விருந்து அளித்தார்கள். ஷை விருந்துக்கு சுமார் 50 பேர்வரை வந்திருந்தார்கள். புதிதாய் வந்திருக்கும் சப்கலெக்டர் ஸ்ரீமான் T S. சாமிநாதன் I. C. S. அவர்களும் விருந்துக்கு விஜயம் செய்தார்கள். இரவு 7-30 மணிக்கு சப்கலெக்டர்கள் இருவர்களும் வந்ததும் ஷை யார்களுக்கு ஸ்ரீமான் ராவ்பகதூர் பெ. அ. சித. வீரப்ப செட்டியாரவர்களாலும் ஸ்ரீமான் கவீ. அழ. ராம. ராமநாதன் செட்டியாரவர்களாலும் மாலைகள் அணிவிக்கப்பெற்று அழைத்து செல்லப்பட்டார்கள். விருந்து முடிந்ததும் ஸ்ரீமான் ராவ்பகதூர் கவீ. அழ. ராம. ராமநாதன் செட்டியாரவர்கள் இரண்டு சப்கலெக்டரவர்களுக்கும் ஜரிகை மாலைகள் சூட்டினர்கள். இரவு 9 மணிக்கு விருந்துக்கு வந்தவர்களால் வந்தனோபசாரத்துடன் வழி அனுப்பப்பட்டு இருவர்களும் தேவகோட்டைக்கு சென்ருர்கள்.

சிலோன் ஏஜெண்டு:—வட ஆர்க்காடு ஜில்லா கலெக்டராயிருந்து சிலோனுக்கு இந்தியா கவர்ன்மெண்டு ஏஜெண்டாக நியமிக்கப்பட்டிருக்கும் ஸ்ரீமான் T L R சந்திரன் I C S அவர்கள் சிலோன் போட்மெயிலில் சிலோனுக்குச் சென்ருர்கள். அன்னுருக்கு கோட்டையூர் ஸ்டேஷனில் கோட்டையூர் ஸ்ரீமான் ராவ்பகதூர் க. வீ. அழ. ராம. ராமநாதன் செட்டியார் அவர்கள் வரவேற்று, உபசரித்து மாலைகள் சூட்டி, சிற்றுண்டிகள் அளித்தார்கள். கோட்டையூரிலிருந்து காரைக்குடிவரை ஷையார்களுடன் சென்று விடைபெற்றுக் கொண்டார்கள்.

---

## தேவகோட்டை.

(காரியதரிசி)

சரஸ்வதி வாசகசாலை:— இவ்வாசகசாலையின் மாதக்கூட்டம் கார்த்திகை 2-ம் நாள் வெள்ளிக்கிழமை பிற்பகலில் திரு. சோம. இராமநாதன் அவர்கள் தலைமையில் கூடியது. அதுகாலை திருவாளர்களான காரைக்குடி மெ. சு. தி. தண்ணீர்மலையான் அவர்கள் "உடனழைத்துச் செல்லல்" என்பதுபற்றியும், சு. மு. சுப்பிரமணியன் அவர்கள் "உபந்யாசம் புரிதல்" என்பது பற்றியும், V. முத்தையா அவர்கள் "நாடகமேடையும் தனவைசியர்களும்" என்பதுபற்றியும், மெ. சி. மாணிக்கவாசகன் அவர்கள் மேற்கண்ட மூன்று சொற்பொழிவுகளைத் தழுவியும் பேசினர்கள்: தலைவர் முடிவுரை கூறியதும் திரு. சோம. செல்லப்பா அவர்கள் வந்தனங் கூறக் கூட்டம் இனிது முடிந்தது.

---

## புதுவயல்.

(ஒரு நிருபர்)

ஸ்ரீ சரஸ்வதி சங்கம்:—இச்சங்கத்தின் 12வது ஆண்டு ஆருவது மாதக் கூட்டம் நாளது ஐப்பசிமீ 29உ மாலை 4-30-க்கு மேல் சங்கத்தின் சார்பாக நடைபெறும் ஸ்ரீ சரஸ்வதி வித்தியாசாலையின் தலைமை ஆசிரியர் கே. சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில், சூரியவணக்கம், குடும்பவாழ்க்கை, வீண்கர்வம் கொள்ளேல், (ஓர் நடிப்பு) வறுமையின் கொடுமை, மதுபானம் எனும் பொருள்பற்றி ஸ்ரீ சரஸ்வதி வித்தியாசாலை மாணவ மாணவிகளான வீர. சோமசுந்தரம், வெ. உமையாள், ராம. வீரப்பன், கும. ரெங்கனுதன்; மு. மீனுக்ஷி ந. சீதாலெக்ஷிமி, ஆறு. உடையப்பன் முதலியவர்கள் உரையாடல் நிகழ்த்த வீர. பழ. வினைதீர்த்தான் செட்டியாரவர்கள் தேசபக்தரும் இந்தியா சட்டசபை மாஜி தலைவரும் ஆகிய உயர் திருவாளர். வி. ஜே. படேல் அவர்கள் அகாலமரண மெய்தியது குறித்து அனுதாபத் தீர்மானம் ஒன்று பிரரேபிக்க சோம. தியாகராஜன் செட்டியாரவர்களால் ஆமோதிக்க சபையிலுள்ள அனைவர்களும் எழுந்து நின்று தங்களது வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டதும் தலைவரவர்களால் முடிப்புரை பகர வந்தன வாழ்த்துடன் இனிது நிறைவெய்தியது.

---

## புதுப்பட்டி.

(காரியதரிசி.)

கலைமகள் வாசகசாலை:- ஸ்ரீமுக ஆண்டு ஐப்பசித் திங்கள் 29-ம் நாள் செவ்வாய்க்கிழமை, மாலை 5 மணிக்கு திருவாளர் நா. வீர. வீரப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் ஆருவது ஆண்டு விழா ஆரம்பமாயிற்று. தலைவர் அவர்கள் முன்னுரைகூறியபின் காரியதரிசி திரு. மெ. மெ. நா. இராமசாமி செட்டியாரால் வாசகசாலையின் அறிக்கை வாசிக்கப்பெற்று திரு. வீர. அழகப்ப செட்டியார் "சமூக சீர்திருத்தம்" என்பதுபற்றியும் திரு. நா. கிருஷ்ணப்ப செட்டியார் "இளைஞரும் வாசகசாலையும்" என்பது பற்றியும் மேலைச்சிவபுரி திரு. ஆ. பழ. சொக்கலிங்கம் செட்டியார் "காதலும் கடமையும்" என்பதுபற்றியும் சேக்கிழார் செந்தமிழ் கல்லூரி ஆசிரியர் திரு. K. R. ராமகிருஷ்ண முதலியார் "வாசகசாலையின் அவசியம்" என்பதுபற்றியும் பேசினர்கள். பிறகு தலைவர் அவர்கள் முடிவுரைகூற காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறப்பெற்று கடவுள் வாழ்த்துப்பாட அவை 6-30 மணிக்கு இனிது நிறைவெய்தியது.

குறிப்பு:—இவ்வாசகசாலையில் 450 புத்தகங்கள் இருக்கின்றன. சென்ற ஓர் ஆண்டில் வாசித்து இன்புற்றவர்களின் எண்ணிக்கை 1300 அவர்களுக்கு எங்கள் நன்றி உரியதாகுக தினப்பதிப்பு, வாரப்பதிப்பு, மாதப்பதிப்பு பத்திரிகைகள் 12 வரவழைக்கப்பெற்று உள்ளூர் அயலூர் அன்பர்கள் வாசித்துப் பயன்பெறுவதுடன் இளைஞர்களால் தினமும் செவ்வனே திரேகப் பயிற்சி நடைபெற்று வருகிறது. மேலும் வளர்பிறைபோன்று வளர்ந்து ஓங்க அன்பர்கள் ஆதரிக்க வேண்டுகிறேன்.

---

## தேயிலை செடி விதைத் தடை.

திருவாங்கூர் ஜனப்பிரதிநிதி சபை 7—6—33 முதல் அயல் நாடுகளுக்கு தேயிலைச் செடிவிதைகளை ஏற்றுமதி செய்யக் கூடாதென்ற இந்திய கவர்ன்மெண்டார் உத்தரவை அங்கீகரித்திருக்கின்றது.

---



## நோட்டீஸ்.

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

1933-ஹூ S. C. 933.

ரூம. அரு. அரு. ரூம. அருணுசலம் செட்டியார் } ... வாதி

முத்தளகுக்கோன் Died 1
வீருண்டிக்கோன் 2
சுடலைமுண்டக்கோன் 3
கருப்பையாக்கோன் 4
வீரபத்திரக்கோன் 5
} பிரதிவாதிகள்

ஷை வாதிக்கு 1-ம் பிரதிவாதி ரூ. 26—0—0க்கு எழுதிக் கொடுத்த புரோநோட்டின் பேரில் அசல் வட்டியுள்பட 34—13—5க்கும் பிருது செய்து ஷை பிருது முடிவுக்காக 9-12-33உ வாயிதா ஏற்பட்டிருக்கிறது. அன்று பிரதிவாதிகள் கோர்ட்டில் ஆஜருகா விட்டால் எக்ஸ் பார்ட்டியாகத் தீர்ப்புச் செய்யப்படும்.

M. நாகஸாமி அய்யர்,
வக்கீல்.



ரே. சி. குட்டன் என்பவர் "மிதவாதி" ப்பத்திரிகையில் எழுதுவதாவது:—

# "இந்து மதத்தை அழிக்க"

## காந்திஜீக்கு வேண்டுகோள்.

காந்திஜீ ஒன்பது மாதம் ஒரு அகில இந்தியச் சுற்றுப்பிரயாணம் செய்ய நிச்சயித்திருக்கிருர். அதிசீக்கிரத்தில் அவர் மலையாளத்தை அடையக்கூடும். அதுபோது ஜாமோரினிடமும் இண்டந்துருத்தி நம்பூதிரியினிடமும் தீண்டாதார்மாட்டு இரக்கம் காண்பிக்கும்படிக் கேட்டுக் கொள்வார். காந்திஜீயின் தீண்டாமை யொழிப்புப் பிரசாரம் தீண்டாதார்களை உயர்த்திவிடவோ உதவி செய்யவோ செய்யவில்லை. காந்திஜீயினுடையவும் அவரது சீடர்களுடையவும் அந்தரங்கமான ஆசை, இந்துக்கள் தொகையை அதிகப்படுத்திக் காண்பிப்பதும் இயலுமானுல் ராமராஜ்யத்தைத் தருவித்துக் கொள்வதுமாகும். இந்தத் தீண்டாதாரென்பவர்கள் ஸ்ரீராமமூர்த்தி ஆட்சி செய்து கொண்டிருந்த புண்யகாலத்திலும் இந்தியாமுழுதும் பாலும் தேனும் ஓடிக்கொண்டிருந்த திவ்யகாலத்திலும் தான் படைக்கப்பட்டார்கள் என்று தெரிந்து கொள்பவர்கள், பைத்தியம் வந்தாலல்லாமல் இராமராஜ்யம் வரவேண்டுமென்று ஆசைப்படமாட்டார்கள்.

வர்ணங்களைப்பற்றிய காந்தி தத்துவப்படி தாழ்த்தப்பட்ட வகுப்பார் இந்துக்களல்ல. இது காந்திஜீக்கு நன்கு தெரியும். ஆகவே தீண்டாமையை ஒழிக்கும் வேலை என்பது; தீண்டாதாருக்கு மதமாகிய அபினைப் புகட்டி, மாளவியாவைப்போல் தன்னலம் கருதிய விஷயங்களை அடைந்து கொள்ள ஆசைப்படும் சிலருக்கு ஏவலாளராக்கிவிடவே செய்யும். எனவே தாழ்த்தப்பட்டார் காந்திஜீயையும் அவரது சீடர்களையும் தலைவர்களாய் ஏற்றுக்கொள்வதைப் பெரிய அபாயமென்று கருதவேண்டும். அதோடு அவர்களுடைய சம்பந்தத்தை விட்டு நீங்கிக்கொள்ளவும் வேண்டும். இந்த வேலையானது தேசம் முழுதும் இப்போது செய்யப்பட்டு வருகிறது. முதன் முதலில் அவ்வேலையை ஆரம்பித்தவர்கள் கேரளத்துத்தீயர்களென்று நினைக்கிறேன். தீயர்களில் சிலர் தங்நலம்கருதி இந்துக்களாகவே சிலகாலமிருக்க நினைத்தனர். அந்தநினைப்பு எங்களுடைய இயக்கத்திற்குப் பெரிய தடையாகி விட்டது. அப்பால் விழிப்புண்ட சில தலைவர்கள் மெய்யாகப் பாடுபட நினைத்து வழி காட்டினர்கள். எனவே இப்போது இந்து மதத்தை யொழிக்க வேண்டுமென்ற ஆசை பரவியிருக்கிறது. இத்தகைய ஒரு தருணத்தில்தான் காந்திஜீ நம்மிடையே வரப்போகிருர். காந்திஜீக்கு ஜனங்களை வசியப் படுத்தும் தோற்றமுண்டு. அவர் தியாகமூர்த்தியெனவும்ஆத்மீக சக்தியின் வடிவமெனவும் கருதப்படுகிருர். அவர் தமது சக்தி முழுவதையும் உபயோகப் படுத்தி எங்களை இந்துமதத்திற்கு இழுத்துவிடப் பார்ப்பார். அவர் வானத்தை யளாவ இந்துமதத்தின் பெருமையை எடுத்துப் புகழ்த்தலாம். மேலும் இந்துமதத்தின் கொள்கைப்படி நடந்தால் மோக்ஷம் வருமென்றும், இதர நலங்கள் தோற்றுமென்றும் கூறலாம். பலர் காந்திஜீயை ஒரு பெரியார் என்று நினைத்திருப்பதால் அவருடைய வார்த்தைகளெல்லாம் உண்மை நிறைந்திருக்குமென்றும் அவருடைய செய்கைகள் புனிதமாயிருக்குமென்றும் கருதுகிருர்கள். இத்தகைய கருத்து இந்திய சமூகம் முழுவதற்குமுள்ள ஒரு பெரிய குறையாகும். நாம் முட்டாள்தனமான விக்ரகாராதனையிலும் பேதைத்தனமான வீரர் பூசையிலும் மூழ்கியிருக்கிருேம். கேரளவாசிகளில் பலர் இந்த அபாயகரமான நிலைமையைவிட்டு நீங்கிக்கொள்ள விரும்புகிருர்கள். காந்திஜீ வருகின்றதாகிய இந்த வேளையில் கேரளவாசிகள் தங்கள் கொள்கைகளைத் தாராளமாக எடுத்துக்கூறிப் பிரசாரம் செய்து கொள்ளவேண்டும். தீயர்களில் சிலர் தம் குலநலத்தை மறந்தெனினும் தேசாபிமானிகள் என்று பெயரெடுத்துவிட வேண்டுமென்று நினைப்பது எனக்குத் தெரியும். ஆகவே உண்மையுணரும் அபிமானிகள், இந்தத் தேசாபிமானிகள் வார்த்தைகட்கிணங்கி காந்தி யபினைக் குடித்து மதமாகிய பைத்தியக்கார ஆஸ்பத்திரியை அடைந்துவிடாமலிருப்பதற்காக எங்கும் பிரசாரம் செய்யவேண்டும்.

கேரளத்தில் காந்திஜீ எங்தெந்த விடங்களில் இந்துமதத்தைப்பற்றிப் பேசுவாரோ அந்தந்த விடங்களில் நாம் இந்துமதத்தின் எதிரிகளென்பதைக் காண்பித்துக் கொள்ளும் கூட்டமொன்றைத் திரட்ட வேண்டும். அதற்கு முன் நாம் ஏன் இந்து மதத்தை வெறுக்கின்ருே மென்பதை ஜனங்கட்கு எடுத்துக்கூற வேண்டும். நாம் காந்திஜீயைக் கவனமாக அணுகி, அவரை நாம் மதிக்கவில்லை யென்பதைக் காண்பித்துக்கொள்ளாமல், வணக்கமாக. அவர்இனிமேல் இந்துமதப் பிரசாரம் செய்வதை விட்டு விட்டு இந்துமதத்தை அழிக்கும் வேலையி லீடுபட வேண்டுமென்று கேட்டுக் கொள்ள வேண்டும். அதோடு நமது அழிவுக்கு இந்துமதமே காரணமென்பதனையும் எடுத்துச் சொல்ல வேண்டும்.

காந்திஜீயை சந்திக்கும் உரிமை பெற்றவர்களெல்லோரும் தவறிவிடாது மேற்படி வேலையைச் செய்யவேண்டும். அன்றி நாம் நம்கருத்துத் திகழ துண்டுப்பிரசுரங்கள் அச்சிட்டு எங்கும் வழங்கவும்வேண்டும். அதோடு சமாசாரப்பத்திரிகைகளிலும் இதர சஞ்சிகைகளிலும் நம்கருத்தை வெளியிட வேண்டும்.

நான் ஆலயப்பிரவேச இயக்கம் தீண்டாதாரின் வாழ்க்கைக்கு மிகவும் நாசத்தைச்செய்கின்ற இயக்கமென்று கருதுகிறேன். காந்திஜீபோன்ற தலைவர்களிடம் கோவிலை அழிக்க முயலவேண்டுமேயன்றி அதற்குள் நுழையப் பாடுபட முயலலாகாதென்று கேட்டுக்கொள்ளவேண்டும். ஆலயங்கள் ஏழைகளுழைப்பைப் பிடுங்கி ஒருசிலருக் குணவூட்டவே அமைந்திருக்கின்றன. ஆலயப்பிரவேசத்தால் தீண்டாமை அழிந்துவிடாது. ஆலயத்திற்குள் சென்று வணங்கும் ஜனங்கட்குள்ளாகவே தீண்டாமையிருக்கிறது. ஹிந்துமதம் அழிந்தால்தான் தீண்டாமையும் நெருங்காமையும் அழியும். தாழ்த்தப்பட்டவர்கட்கு ஆலயம் ஓர் அபாயம். அவ்வபாயத்திலிருந்து தாழ்ந்தவர்கள் தப்பிக்கொள்ளும்படி உதவிபுரிவதே இரக்கமுடையவர்கள் வேலை. இந்துமதத்தை சேரும்படியொரு கூட்டத்தாரைக் கேட்டுக்கொள்வதைவிட அவர்களுடைய கைகளையும் கால்களையும் கட்டிக் கடலில் எறிந்துவிடுவது சிறப்புடையது. இத்தகைய எங்கள் மனப்பான்மையை காந்திஜீயின் கவனத்திற்குக் கொண்டுவருகிருேம். மதப்பித்துடைய அவர்துணைவர்களும் ஆலயப்பிரவேசமென்ற தப்புவழியை விட்டுவிட்டு ஒழுங்கான பாதையில் செல்லத் தொடங்கினர்களானுல், நாங்கள்இவ்வளவுபிந்தியானுலும் நல்லவழி சென்ருர்களே என்று திருப்தியடைந்து கொள்வோம். அந்தக்காலத்தில் பார்ப்பனர்களையும் பணக்காரர்களையும் ஆதரிக்கும் காந்திஜீ 8 கோடி மக்களின் நண்பராவர். இப்போது அவர் பார்ப்பனா ஆதிக்கத்தை நிலைநாட்டவும் ஏழைகளை சுரண்டித்தின்னவும் ஒரு கருவியாக உபயோகப்படுத்தப் படுகிருர். நாம், ஒருகால் மதத்தின் கீழ் எவ்வளவு தொல்லைகட்காளானேமென்பதை எடுத்துக் கூறினுல் காந்திஜீ அவருடைய பெரிய செல்வாக்கையும் அபாரமான சக்தியையும் நம்வழியிலுபயோகித்தாலு முபயோகிப்பார். காந்திஜீயை வரவேற்கின்ற "தடபுடலில்" நமது லக்ஷியங்களை மறந்து விடலாகாது. அவர் மீது நாம் வைத்திருக்கிற அன்பினுலும் நாம் காண்பிக்கின்ற உபசாரத்தினுலும் நமது கொள்கையை சொல்லும் சந்தர்ப்பத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும். எனவே அவர் திரும்பிச் செல்லும்போது நமது புதிய கருத்தை அவர் தெரிந்து கொள்ளவேண்டும். ஒருகாலத்தில் காந்திஜீயினுடையவும் மாளவ்யாஜீயினுடையவும் வார்த்தைகளுக்கேற்ப ராமநாமத்தை ஜபித்துக் கொண்டிருந்தோம். இன்று அடியோடு மாறிவிட்டோமென்பதை காந்திஜீக்கு உணர்த்த வேண்டும்.

---

லண்டன் பசுக்காட்சிக்குக் கொண்டுவரப்பட்டிருந்த எஸக்ஸ் பசுவொன்று இரண்டு நாளையில் 197·5 ராத்தல் பால் சுரந்தது. அதாவது ஒரு நாளையில் 10 காலன் பாலை சொரிந்தது. அந்தப் பசுவினத்தைச்சேர்ந்த எல்லா மிருகங்களும் அதிகமான பாலைச் சொரிந்தன.

# பெண்கள் ஆடவரினும் சிறந்தவரன்றே?

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

பத்ம வ்யூகத்தில் போர்செய்யக் கற்றான். நெப்போலியனின் பெரும் வீரமும் அவன் கருப்பத்திலிருக்கும்போதே கற்பிக்கப்பட்டதுதான். அவனுடைய தாய் அங்குமிங்கும் அலைந்து திரிந்து காலம் தள்ள வேண்டியவளா யிருந்தாளானாலும் அவள் எப்போதும் கிரேக்கவீரர்களையும் ரோமன் வீரர்களையும் மனதில் தியானித்துக் கொண்டேயிருந்தாள். அதோடு எப்போதும் வீரர்களைப்பற்றிய பாட்டுகளைப் பாடிக்கொண்டு மிருந்தாள். இத்தகைய அப்பெண்மணியின் கருப்பகால போதனையே நெப்போலியனை உலகம் வியக்கும் பெரிய வீரனாக்கிற்று.

## வீரம் புகட்டினர்.

சரித்திரத்தைச் சிறிது திறந்து நோக்கினால் மத்திய காலத்தில் பெண்களே பெரிய வீரதீரச் செயல்கட்கு மூலகாரணராயிருந்தனரென்று காணலாம். அக்காலங்களில் பெண்கள் தூண்டுதலால் ஆடவர் உடற்பயிற்சிப் பரீட்சைகள் காண்பித்து வந்தார்களாம். அவற்றைப் பெரிதும் பெண்களே பார்த்து மகிழ்ந்து வந்தார்களாம்.

இன்னும் சரித்திரத்தை நோக்கினால் பல பெரிய அரசர்கள் அக்காலத்தில் பெண்கள் கைகளில் சிக்கியிருந்தார்களென்று தெரிகிறது. ஜிஹாங்கிர் சக்ரவர்த்தித் தமது சுயசரிதையில் தான்; ஒரு டம்ளர் ஒயினுக்காகத் தம்மனைவிக்கு அடிமைப்பட்டுப் போனதாக எழுதியிருக்கிறார். கடவுளரும் கூடப் பெண்கட்கு வணங்கியதாய்ப்படிக்கிறோம். சாவித்ரியின் வாழ்க்கையைக் கவனித்தால் இயமன் கூடவும் அவளுக்கு அடிமைப்பட்டு விட்டானென்று காணலாம்.

## உடல்வலி யுடையார்.

வைத்திய சாஸ்திரமுறைப்படிப் பார்த்தால் ஜனசமூகத்தில் பெண்களே அதிகம் உறுதிப்பாடுடையவர்களென்பது புலனாகும். பெண்கட்கு உயிர்போகும்படியான நோய்கள் அதிகம் வருவதில்லை. ஆடவர்களோடொப்பிட்டுநோக்கினால்பெண்கள்அதிக நாள் வாழ்கின்றார்களென்பது விளங்கும். இக்கூற்றை உலகில் எந்தத் தேசத்திலுமுள்ள ஜனனமரணக் கணக்கை எடுத்துப் பார்த்தால் மெய்யென்று நிரூபித்து விடலாம். வைத்திய நிபுணர்கள் நன்றாக ஆண் பெண்களுடைய உடம்பைப் பரீட்சித்துப் பார்த்துவிட்டு நடுப்பிராயமான 33 வயதுடைய ஆடவர் உடம்பில் நூற்றுக்கு 30½ பாகம் கொழுப்புத் தானிருக்கின்றதென்றும், ஆனால் 22 வயதான நடுப்பிராயமுள்ள ஒரு பெண்ணினுடம்பில் 44 பகுதிகொழுப்பிருக்கின்றதென்றும் சொல்கிறார்கள் இத்தகைய உடலியற்கையினால் பெண்கட்கு அதிகமான புத்தியும், அதிகமான பொறுக்கும் குணமும் அதிகமான நோய் தடுக்கும் ஆற்றலும் அதிகமான கூடலுணர்ச்சியை அடக்கும், சக்தியும் ஏற்படுகின்றன. உலகில் பெண்களிடையே புருஷர்களைப்போல அளவற்ற திருடர்களும்; வழிப்பறிக் கொள்ளைக்காரர்களும், குடிகாரரும் பார்க்கமுடியாது. அதேபோல சிறைபுகுகின்றவர்களும் குற்றவாளிகளும் ஏராளமாகப் பெண்களிடையே காணமுடியாது. நெஞ்சுநோய், தொண்டை நோய் ஆகியவை ஆடவர்களைப்போல பெண்கட்கு ஏற்படுவதில்லை. மதிமயக்கம் (சித்த சுவாதீன மின்மை) பெண்கட்கு விடுதலை பெருகும் தோறும் குறைந்து கொண்டே வருகிறது. ஒருவர் "பெண்கட்கு அதிகம் விடுதலையைக் கொடுத்துப் பாருங்கள். அவர்களிடையே சித்தப்பிரமையே இல்லாதிருப்பதைக் காணலாம். சித்தப்பிரமை பெரும்பான்மையும் உள்ளிருந்தும் உணர்ச்சியை அடக்குவதினாலு ஏற்படுவதாகும்" என்கின்றார்.

## பலதுறையில் வலிமை.

பெண்களுக்குள் பல அரசிகளிருந்திருக்கின்றார்கள்; பல வீரமாதர்களிருந்திருக்கின்றார்கள், பல விஞ்ஞானிகளிருந் திருக்கின்றார்கள், பல மதபோதகர்கள் கணிதசாஸ்திரிகள், தலைவர்கள், போதகர்கள், ஞானிகளிருந்திருக் கின்றார்கள். விக்டோரியாவையும், எலிஜபத் ராணியையும், ரஜியா பீகமையும், சந்தபீபி, அஹல்யாபாய், தூர்ஜஹான், மும்டாஸ்பீகம் ஆகியவர்களையும் அறியாதார் யார்? மாடம் கூரி விஞ்ஞான உலகில் ஒரு பெரும் பெயரை உண்டுபண்ணியதை யார்தான் அறியமாட்டார்கள்? ஜோன் அப் ஆர்க் தம் நாட்டிற்காகத் தம் உயிரை தியாகம் செய்தார்! பிளாரன்ஸ் நைட்டிங்கேல் மக்களுழியத்திற்குத் தம் வாழ்நாளைத் தத்தம் செய்தார். மேரி கோரெல்லியும் ஜியார்ஜ் இலியட்டும் எல்லோருமறிந்த பெரிய நாவலாசிரியராவர். மைத்திரியும் கார்கியும் ஆத்மீக மார்க்கத்தில் எந்த முனிவரையும் தோற்கடித்தனர். லீலாவதி பெரிய ஆல்ஜிப்ராவை எழுதினர். சதுரங்கம் என்பது ஒரு பெண்ணினால் தான் கண்டுபிடிக்கப்பட்டதென்று சொல்லப்படுகிறது. டாக்டர் மாண்டசோரி கல்வியாளர்களில் பெருமை பெற்று ஒளிர்கின்றார்.

## பெண்கள் உணர்ச்சி.

சில பெண்கள் தாம் ஆடவர்களைவிட நன்னிலையில் வைக்கப்பட்டிருக்கின்றார்களென்பதை உணராமலில்லை. லேடி ஆக்ஸ்போர்டு என்பவர் ஓரிடத்தில் "நான் ஒரு ஸ்மித்தாகவோ, கிரீனாகவோ, பிரௌனாகவோ (அதாவது புருஷனாக) பிறந்திருந்தேனானால் இதைவிட நன்றாக எழுதியிருப்பேன். ஆனால் என் எழுதும் திறமையை உலகம் பலவருடங்கட்குப் பிந்தித்தான் உணரும். ஏனெனில் பல ஆசிரியர்கள் பிந்திய காலத்தில் தான் பாராட்டப்பட்டார்கள்." என்று எழுதுகிறார். அப்பால் ஓரிடத்தில் "பெண்கள் உடலமைப்பில் ஆண்களைவிட சில அசௌகரியங்களைப் பெற்றிருந்தாலும் அவர்கள் புருஷர்களைவிட சக்திமிக்கவர்களென்பதில் ஐயமில்லை. பெண்கள் இங்கிலீஷ் சானலை நீந்துகிறார்கள். பிளேனில் மிகத்திறமையாக சுட்டுக்காண்பிக்கிறார்கள். உலகில் பலவிடங்களில் திறமையாகப் பறந்து போகிறார்கள். அதோடு எத்தனை நாள் வேண்டுமானாலும் சலிப்பில்லாமல் இரவு முழும் நோயாளிகள் பக்கத்திலிருந்து சிகிச்சை செய்கிறார்கள். நிச்சயமாகவும் எந்த ஆடவனாலும் இவ்வாறு நோயாளிக்கு சிகிச்சை செய்ய முடியாது. பாடசாலைப் படிப்புகளில் பெண்கள் ஒரு சிலவருடமே கல்வி கற்றாலும் மிகுந்த திறமையுடையவர்களாய்த் திகழ்கின்றார்கள்......பெண்களின் உணரும் தன்மை விசேஷமானதாகும்... ...அவர்கள் நன்கு ஆராய்ச்சி செய்து ஒரு முடிவை வெகு சீக்கிரத்தில் சொல்லிவிடுவார்கள். அந்தசக்தி எந்தப் புருஷனுக்குமில்லை" என்று பெருமையுடன் பொறிக்கின்றார்.

போதனை முறையில் பார்த்தால் பெண்கள் ஆடவரைத் தோற்கடித்து விடுவார்கள். ஒருதாய் நூறு ஆசிரியர்கட்கு ஒப்பாவாள். ஐரோப்பாகண்டம் முழுதும் இக்கூற்று ஒப்புக் கொள்ளப்படுகிறது. ஆகையினாலே தான் முதல்தரப் பாடசாலைகளில் பெண்ணாசிரியைகள் நியமிக்கப்படுகின்றனர். S. B. ப்ரே என்பவர் எழுதுகிறார்:- பெண்கள் போதனையளிப்பதில் நிகரற்றவர்கள். இயற்கையாகவே அவர்கட்கு போதனை செய்யும் விருப்பமுண்டு. குழந்தைமனப்பான்மை பெரும்பாலான ஆடவருக்கு மறந்து விடுகிறது. ஆனால் பெண்கள் மனதில் எந்நாளும் இயற்கையாகவே பதிந்து கிடக்கிறது"

இத்தகைய பல விஷயங்களையும் உய்த்துணர்ந்து யோசித்துப் பார்க்கின் "புருஷர்கள் என்ன வேண்டுமாயினும் கூறட்டும்; பெண்கள், பெண்கள் அவர்களை ஆளவேசெய்கின்றனா" என்ற கூற்று முற்றிலும் உண்மையுடையதென்று காணலாம்.







## நரம்புக் கோளங்கள்.

நெப்போலியன் உலகறிந்த ஓர் வீரனென்பதும் 19ம் நூற்றாண்டில் ஐரோப்பா கண்டம் முழுதும்—ஏன் உலகமே-நடுங்கும்படித் தன்வீரப்பிரதாபங்களைப் பிரகடனம் செய்தானென்றும் எல்லோருமறிவர். அந்த நெப்போலியன் கடைசியாக வீழ்ந்துபட்டது வாட்டர்லூவென்ற விடத்திலாகும். அங்கு நடந்த யுத்தத்தில் தோல்வியடைந்த பிறகுதான் நெப்போலியனை எதிரிகளால் பிடிக்க முடிந்தது. இவ்வாட்டர்லூயுத்தத் தோல்விக்குக் காரணம் நெப்போலியனுடைய உடம்பிலுள்ள ஒரு கோளமே (Gland) என்று ஒரு விஞ்ஞானி கூறுகிறார். அந்த நிபுணருடைய பெயர் டாக்டர் கோப். டாக்டர் கோப் பலவிதப் பரீட்சைகளால் கோளங்கள் சம்பந்தமான அறிவை நன்கு பெற்றிருக்கிறார். அவர் பண்டைக்கால மனிதரின் படங்களைப் பார்த்து அவர்கள் உடலியற்கை எப்படியிருந்தது என்று கூறிவிடுகிறார். அவர் ஹென்ரி (VIII) வது அரசரது படத்தைப் பார்த்துவிட்டு "இவ்வரசர் 51வது வயதில் தைராயிட் கோளத்தின் மாற்றத்தால் பாதிக்கப்பட்டிருக்கிறார். ஆகையினால் தான் அந்தவருடத்தில் அவர் மாற்றமடையக் காண்கிறோம். அவர் பொறுமையையும் ஜீவகாருண்ய உணர்ச்சியையும் இழந்துவிட்டார். அவரால் அப்போது நிதானித்து ஆலோசிக்க முடியாததினாலேயே துரிதத்தில் காரியங்களை செய்து முடித்தார். ஆகையினால் தான் அவரது கடைசி மனைவி அவரை எளிதில் ஆட்டிவைக்கும் சக்தி படைத்திருந்தாள்' என்கின்றார்.

மற்றொரு கிலாண்டு (கோள) நிபுணர் கூறுகிறார்:— எண்டோக்ரைன் கிளாண்டுகட்கிடையில் தைராயிட் கிளாண்டு மிகவும் முக்கியமானதாகும். தைராயிட் கிலாண்டு கொஞ்சம் முன்னாடியே க்ஷீணமடைந் திருக்குமெனில் ஹென்ரி எட்டாவது அரசன் ஆறுதடவை மணம் செய்திருக்க மாட்டான்.

டாக்டர் கோப் மேலும் கூறும் போது "சரித்திரத்திலுள்ள பலபெரியவர்களின் இயற்கை மாறுபாடுகளெல்லாம் கிலாண்டு மாறுபாட்டினாலேயே நிகழ்ந்திருக்கின்றன. நெப்போலியனின் பிச்சுட்டரி கிலாண்டு மட்டிலும் தேய்ந்து க்ஷீணமடையாமற் போயிருக்குமானால் நிச்சயமாகவும் எவராலும் தோற்கடித்துவிட்டிருக்கமுடியாது" என்று எழுதுகிறார்.

## சினிமா விமானம்.

சோவியத் ருஷ்யா சமீபத்தில் ஒரு புதுமாதிரியான ஆகாயவிமானத்தை இயற்றியிருக்கிறது. இவ்விமானத்தை பிரசாரத்திற்காக வைத்திருக்கின்றார்கள்.

# விஞ்ஞானப் பகுதி.

அது 10 பிரயாணிகளை ஏற்றிச் செல்லும். அதில் பலவிதமான பிரசாரக் கருவிகளிருக்கின்றன. அச்சிடும் இயந்திரங்களும், டைப் செய்யும் கருவிகளும், ஆகாயத்தில் எழுதிக்காண்பிக்கும் விளம்பர இயந்திரங்களும், நோட்டீஸ்களை வாரி இறைக்கும் கருவிகளும் அவ்விமானத்திலிருப் பவைகளில் சிலவாம். இவற்றோடு சினிமாப்படம் காண்பிக்கும் எல்லா கருவிகளும் இதிலிருக்கின்றன.

## ஒரு கன அங்குலத்தில் பத்து டன்.

ஒரு அங்குலம் நீளம், ஒரு அங்குலம் அகலம், ஒரு அங்குலம் உயரமுள்ள ஒரு இடத்தில் 10 டன் எடையுள்ள பொருளை அழுத்திக் குத்தி யேற்றினால் எவ்வளவு நெருக்கமிருக்குமோ அவ்வளவு நெருக்கமிருக்கின்றதாம் நக்ஷத்திரங்களில். இந்த விஷயத்தை ஸர் ஜீன்ஸ் என்ற பிரக்யாதிபெற்ற வானசாஸ்திரி பர்மிங்ஹாமென்ற விடத்தில் ஒரு பிரசங்கம் செய்யும்போது கூறினார். மேற்கூறியபடி அழுத்தமுள்ள நக்ஷத்திரங்கட்கு "காம்பாக்ட்" நக்ஷத்திரங்கள் என்று பெயர். அவை வெண்மைக் குள்ளர்கள் என்ற பெயரால் அழைக்கப்படுகின்றன. அவற்றின் உஷ்ணம் பலகோடி டிக்ரிகளாம். ஸர் ஜேம்ஸ் மேலும் கூறியபோது "புகைப்படத்தில் மிகவும் மங்கலாகத் தெரியும் நெபுலே என்ற நக்ஷத்திரக் கூட்டங்கள் 14 கோடி ஒளி வருடத்தூரத்திலிருப்பவைகள்" என்று குறிப்பிட்டார். வானசாஸ்திரிகள் பிரகாசத்தை (ஒளியை) நன்றாகப் பரிசோதித்துவிட்டு நெபுலேயின் வெளிச்சம் ஒரு செகண்டில்ல (நிமிஷத்தில்) 15 ஆயிரம் மைல் பிரயாணம் செய்கின்றது என்கின்றார்கள்.

## நக்ஷத்திர மழை.

ஐரோப்பாவின் சில பகுதிகளிலும் மொராக் கோவிலும் சென்றமாதம் நக்ஷத்திரமழை பொழிந்தது. அதனைக் கண்ட ஜனங்களெல்லோரும் நடுநடுங்கி விட்டனர். மேற்படி மழைக்குக் காரணமாயிருந்தவை சாதாரண நக்ஷத்திரங்களன்று; எரிவெள்ளிகளாம் அவை ஆகாயத்தில் பலகோடி மின்சார விளக்குகள் பிரகாசித்தாற் போன்ற வெளிச்சத்தைக் கொடுத்துக் கொண்டு அங்குமிங்கும் மழைபோல் விழுந்தன. இடையிடையே வெடிக்கும் சத்தமும் நெருக்கமாக எழுந்தது. ஒப்போர்ட்டோ நகரத்தில் மேற்படிக் காட்சிப் பெருந்திகிலை எழுப்பிவிட ஜனங்களெல்லாம் கூச்சல்போடத் தொடங்கி விட்டார்கள். வானுலகிலிருந்து நக்ஷத்திரங்களே வீழ்கின்றன வென்றும் ஜட்ஜ்மெண்டு நாள் (தீர்ப்பு நாள்) வந்து விட்டதென்றும் நிச்சயித்து விட்டார்கள். ஆகவே தெருத் தெருவாக ஆண்களும் பெண்களும் சத்தம் போட்டுக் கொண்டு ஓடி மாதாகோவில்களிலுள்ள மணிகளை அடித்து விட்டனர். பாதிரி பூஜைகள் நடத்தினர். மெழுகு வர்த்திகள் கொளுத்தப்பட்டன. வெறுங்காலோடு நடந்தனர் பலர். இங்ஙனம் இரவு தவத்திலும் ஜபத்திலும் செலவிடப்பட்டது. சில விஞ்ஞானிகள் காஸ் சம்பந்தமுள்ள தூசி வானத்திலெழும்பி எரிந்து விழுந்த காக்ஷியே மேற்படி நக்ஷத்திர மழையாகத் தெரிந்தது என்கின்றனர்.

## இரட்டைக் குழந்தைகள் இரகசியம்.

இரட்டைக் குழந்தைகள் தன்மையை கற்கவேண்டுவது மிகவும் அவசியமாகி விட்டது. அது ஒரு கலை யென்பதில் சந்தேகமில்லை. புடாபெஸ்டில் சமீபத்தில் அக்கலை பெரிய உதவி செய்திருக்கிறது. ஒரு ஜெர்மன் வாலிபர் ஒரு வீட்டில் திருடினார். அவர் சில குறிப்பிட்ட சாமான்களையே எடுத்துக் கொண்டார். அவரை கைதுசெய்து விட்டார்கள். சில நாட்களுக்குப் பிறகு மற்றொரு பகுதியில் திருட்டுப்போயிற்று. அங்கும் சில குறிப்பிட்ட சாமான்களே கொண்டுபோகப் பட்டிருந்தன. அத்திருட்டை நடத்தியவர் யாவரென்பது தெரியவில்லை. நீண்டநாள் பலர் தேடிப் பார்த்தும் துப்புத் துலங்காத நிலைமையில் இரட்டைக்குழந்தைகள் தன்மையை யுணர்ந்த ஒருவர் இரு இடத்திலும் திருட்டுப்போன சாமான்களை நன்கு பார்த்துவிட்டு முதலாவது கைதிளானவனின் உடன் பிறந்தான் ஒருவனை கைது செய்யும்படிக் கேட்டுக்கொண்டார். உண்மையில் அக் கைதிதான் திருடினனாம்.

## பறக்கும் சுண்டெலி.

லண்டன் பொருட்காட்சிச் சாலைக்கு ஒருவிதப் பிராணி கொண்டு வரப்பட்டிருக்கிறது. இது உருவில் முற்றிலும் சுண்டெலி போன்றதாம். இதன் பெயர் பாலெங்கர். இப்பிராணி மரக்கிளைகளிலிருந்து கீழே இறங்க வேண்டும்போது அடிமரம் வழிவருவதில்லை. இருந்த விடத்திலிருந்தே குதித்து விடுகிறது. அவ்வாறு குதிக்கும்போது அதன் உடம்பில் மடிந்து உடம்போடு சேர்ந்திருக்கும் தோல் விரிந்து குடைபோல் உதவுகின்றது. இக்குடையின் வடிவம் அதற்கு எத்தகைய கெடுதியும் வராது தரையில் இறக்கி விட்டுவிடுகிறது. மேற்படித்தோல் முன்னங் கால்களையும் பின்னங்கால்களையும் இணைத்துக் கொண்டிருக்கிறது. சற்றேறக்குறைய இதனைப் பறவைகளின் இறக்கைகளோடு ஒப்பிடலாம். இந்த அபூர்வ பாலெங்கருக்கு இன்னொரு விசேஷமு முண்டு. அதாவது பெண் பாலெங்கரின் வயிற்றில் ஒரு தோற்பை யிருக்கிறது. இப்பையில் குஞ்சுகள் இளமைப் பருவத்தைப் போக்குகின்றன. கங்காருவென்ற மிருகமும் குட்டிகளை வைத்துப் பாதுகாக்க இவ்வாறு பைகளை அடிவற்றியில் வைத்துக்கொள்கின்றன வென்பதை பலர் அறிந்திருக்கலாம்.

## புல்லுருவிகள் ஏற்றுமதி.

பிரிட்டனிலிருந்து 3 லட்சம் புல்லுருவிகள் வரையிலும் ந்யூ ஜிலாந்துக்கு அனுப்பப் பட்டிருக்கிறது. தென், வடக்கு தீவுகளில் பயிராகும் முட்டைகோஸ் செடிகளை ஒருவிதப் புழுக்கள் தோன்றி அழித்தொழிக் கின்றன. அப்புழுக்களை என்னபாடுபட்டும் ஒழிக்க முடியவில்லை. ஆகவே பிரிட்டனிலிருந்து அப்புழுக்களைக் கொல்லும் புல்லுருவிகள் ஏற்றுமதி செய்யப்பட்டிருக் கின்றன.

## நூற்றுக்கு 10 பேர் நிறம் தெரியாதவர்கள்.

"இங்கிலாந்து ஆடவர்களில் நூற்றுக்கு 10 பேர் நிறங்களை சரியானபடி யுணர்ந்து கொள்ள முடியாமலிருக்கின்றனர்" என்று வைத்திய ஆராய்ச்சிக் கழகத்தார் குறிப்பிடுகின்றார்கள். இவர்கள் மேற்படிக் கூற்றை வெளியிடு முன்பு கப்பலில் வேலை செய்யும் 30 ஆயிரம் பேர்களின் பார்வையைப் பரிசோதித்தனர். அவர்கள் எல்லோரும் நிறங்களை மாற்றி மாற்றித்தான் சொன்னார்கள். எப்படியும் அவர்கள் மூன்று நிறங்களைக் குழப்பிச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். ஒரு பொருள் 100 கஜத்திற்கு அப்பாலிருந்தால் நிச்சயமாகவும் அவர்களால் உண்மை நிறத்தைச் சொல்லிவிட முடியாது.

போர்த்து தீயக்கணவரொருவர் திருமணமான மறுநாள் காலையில் படுக்கை விஞ்டெழுந்ததும் பேச சக்தியற்றுப் போனார். டாக்டர்கள் நாணத்தால் அவருடைய குரல் நரம்புஸ்தம் பித்துவிட்டதென்றனர். ஒருமாதமாகியும் அவரால் பேசமுடியவில்லை.

## "முகமூடி கூடாது"

### கமால்பாஷா உத்திரவு.

நவீன துருக்கியின் சர்வாதிகாரியான கெமால் பாஷா, 'மாடர்ன் ஸ்டேண்ட்' என்ற கல்கத்தா பத்திரிகையில் முகமூடியைப்பற்றி எழுதியுள்ள கட்டுரை வருமாறு:—

முகமூடியணியும் துருக்கி ஸ்திரீகள் கடுந்தண்டனை விதிக்கப்படுவரென துருக்கிக் குடியரசில் சட்டமுண்டாக்கப் பட்டிருக்கிறது.

முன்னேற்றக் கொள்கைகளையும் முறைகளையும் நாங்கள் புகுத்த ஆரம்பித்தது முதல், துருக்கியிலுள்ள ஆடவர்களைவிடப் பெண்டிரே எங்கள் முயற்சிகளை எதிர்த்தார்கள்.

துருக்கி ராஜ்யத்தின் தலைநகரில் பெரும்பான்மையான ஸ்திரீகள் முன்னேற்றத்தையும், சுதந்திரத்தையும் ஆதரிக்கின்றனர். சில விஷயங்களில் ஆண்மக்களைவிட முற்போக்குடைய வர்களாகவும் அவர்களிருக்கின்றனர். ஆனால் கிராமங்களிலுள்ள சாதாரண ஜனங்கள் தான் நாகரிகத்திற்கு முட்டுக் கட்டையாயிருக்கின்றார்கள்.

அயிண்டாப்பிலும் வடகிழக்கு மாகாணங்களிலும், பெஸ்குல்லாவை எடுத்துவிடவேண்டுமென்ற சட்டத்திற்கு விசேஷ எதிர்ப்பு இருந்துவந்தது. சிலர் பகிரங்கமாகவே கிளர்ச்சிசெய்ய ஆரம்பித்தனர். ஆகவே கலகத்திற்குத் தலைவர்களாயிருந்தவர் ஐவரை நாங்கள் தூக்கிலிடவேண்டியதாயிற்று. அதாவது பழைமையைவிட்டு விலகி மேனாட்டு நாகரிகத்தைப் புகுத்தத் துருக்கிக் குடியரசு தீர்மானித்துவிட்டதென்பதை மதப்பித்துக் கொண்டவர்களுக்கு எடுத்துக்காட்டுவதே எங்கள் செய்கையின் நோக்கம். எங்கள் நாடு முழுவதும் தேடினாலும்கூட பெஸ்குல்லா வணிந்தவர்கள் நூற்றுவரை நீங்கள் காணவியலாது.

பெண்களிடையே சீர்திருத்தம் செய்வதுதான் கஷ்டமாகிவிட்டது. முதலில் நாங்கள் பிரசாரம் செய்து பார்த்தோம். ஓரளவு வெற்றியும் பெற்றோம். பின்னர் கிரியாம்சையில் முன்னேற்ற நடவடிக்கைகளைச் செய்து காட்டினோம். கிராமங்களிலுள்ள சிறு பெண்களை முகமூடிகளைக் களைந்துவிடுமாறு தூண்டினோம். ஆனால் விவசாயிகளான கிராமவாசிகள் நாரிகமுறைகளைப் பரிகசித்தார்கள். பல விடங்களில் முன்னேற்றப் பிரசாரகர்கள் தாக்கவும் பட்டனர்.

பெஸ்குல்லாய் ஏதோ சாதாரண தலையணியாக மதிக்கப்பட்டிருந்தால், அது அவரவர் இஷ்டம் என்று சொல்லி நாங்கள் பேசாது விட்டிருப்போம். ஆனால் அது மதசம்பந்தமான ஒரு சின்னமென்றும், முஸ்லீம்களும் துருக்கியரும் அதையணியாதிருக்கக்கூடாதென்றும் அநேகர் நம்பத்தலைப்பட்டனர். ஹாட் அணிந்தவர்கள் பெஸ்குல்லாய் அணிந்தவர்களால் கிராமங்களில் தாக்கப்பட்டனர். ஆகவே பெஸ்குல்லாய் தான் வழக்கத்திலிருக்க வேண்டுமா? ஹாட்டா? என்ற பிரச்னை எழுந்தது. ஹாட் சார்பாகவே முடிவு ஏற்பட்டது.

முகமூடி யணிந்து கொண்ட ஸ்திரீகள் தாங்கள்பரிபூரணயோக்கியதையின்வடிவம் என்று மதித்துக் கொள்ளுவதுடன் அமையாமல், முகமூடியணியாதவர்கள் நாசமுற்றவர்களென்றும் வெட்கமில்லாத வர்களென்றும் கருதுகின்றனர். ஆகவே முகமூடி வஞ்சகத்தை மறைப்பதற்கு ஒரு சாதன விட்டது. அதை நான் சுக்கு நூறாகக் கிழித்தே தீருவேன்.

மேலும் முகமூடி யணிதல் சுகாதாரக் கொள்கைகளுக்கு விரோதமானது. நூற்றாண்டுக் கணக்காக முகமூடி போட்டுப் போட்டு அவர்களுடைய முகங்கள் வெளுத்துச் சுருங்கிக் கிடக்கின்றன.

யோக்கியதையைக் கவனித்தும் முகமூடிகளைக் களையவேண்டியதாகிறது. அன்டோலியாவிலுள்ள நம்மவர்கள் தங்கள் குடும்பத்தினரையும் சில கிறிஸ்தவ ஸ்திரீகளையும் தவிர்த்து வேறுபெண்டிரையே பார்த்தது கிடையாது. துருக்கியின் ஐரோப்பிய மாகாணங்களில் ஆடவர் கொஞ்சம் தாராளமாகப் பெண்களைப் பார்க்க அவகாசமிருக்கின்றது. மேனாடுகளில் ஆடவர் பெண்களைப் பார்ப்பது வெகு சகஜமாயிருக்கின்றது.

அதிகமாகப் பெண்களைப் பாராதவர்களான அனடோலியா மாகாண வாசிகள் மற்ற எல்லோரையும்விட காமாதுரர்களாயிருக்கிறார்களென்பதை நான் கண்டறிந்திருக்கிறேன்.

மேலும் பெருங் குற்றவாளிகளை மறைப்பதற்கும் முகமூடி உபயோகப்படுகிறது. தந்திரசாலிகளான குற்றவாளிகள் அநேகர் பல வருடங்களாக 'ஸார்' என்னும் முகமூடியைப் போர்த்திகொண்டு திரிந்தனர். குடியரசு ஸ்தாபிக்கப்பட்ட பின்னர் முதல் மூன்று வருடங்களில் மாத்திரம் நாலாயிரம் குற்றவாளிகள் முகமூடி யணிந்து திரியக் காணப்பட்டனர்.

முகமூடி யணிந்த ஸ்திரீகள்தவறான நடத்தைக்காகக் குற்றம்சாட்டப்படுவர். அவர்களுக்கு அபராதம் விதிக்கப்படும். இரண்டாமுறையும் அவர்கள் இக்குற்றம் செய்தால் அபராதம், சிறை அல்லது இரண்டும் விதிக்கப்படும். மூன்றும் முறையும் குற்றம் செய்யின் தேசத் துரோகத்திற்காக அவர்கள் மரண தண்டனை விதிக்கப் பெறுவர்.

---

## ஒரு மாணவனுக்கு மரண தண்டனை.

சென்ற வருஷம் மெட்றிகுலேஷன் பரீட்சையில் தேறிய சிவனாத் என்ற 16 வயதுப் பையன் ஹூடியான முனிஸிபல் கமிஷனரின் பெண் பள்ளிக்குப் போகையில் அவளை வெறிக்கப்பார்ப்பது வழக்கமாம். இதைப்பற்றி அப்பெண் தாயாரிடம் சொல்ல, தாயார் மேற்படி சிறுவனைக் கண்டித்தாள். அன்று மாலையே பையன் ஒரு துப்பாக்கியுடன் அப்பெண்ணின் வீட்டுக்குச் சென்று சமையலறையிலிருந்த பெண்ணின் தாயாரைச் சுட, அது குறி தவறி விட்டதாகவும், பெண்ணின் சகோதரன் எதிரியைப் பிடிக்க யத்தனித்தபோது அவனை சிவனாத் சுட்டுக் கொன்று விட்டதாகவும், வீட்டு வேலைக்காரன் பிடிக்கவந்தபோது அவனும் சுடப்பட்டதாயும் ஆனால் குறிதவறிவிட்டதென்றும், சிவனாத்மீது வழக்கு கொண்டுவரப்பட்டு செஷன்ஸ் ஜட்ஜியால் அவன் மரண தண்டனை விதிக்கப்பட்டான். அதன்மீது சிவனாத் ஹைகோர்ட்டுக்கு அப்பீல் செய்வாதம் நடக்கிறது.





## சங்கராசாரியார் சாபம்.

(தென்னாலிராமன்)

தமது "சாட்டம்" வெளியே செல்லாதென்று தெரிந்தால் உடன் வீட்டிற்கு வந்து, ஏற்பட்ட கோபந்திர மனைவியை நையப்புடைக்கும் சில புருஷர்களை அன்பான வாசகர்கள் பலர் பார்க்காதிருந்திருக்க மட்டார்கள். அதுபோலாகி விட்டார் சங்கேஸ்வர மடத்து "ஸ்ரீ சங்கராசாரியார்". அவர் தமது வாக்காயுதங்களைப் பல திசைகளிலும் செலுத்திப் பார்த்தார்; சாஸ்திரங்களை எடுத்துச் சொல்லிப்பார்த்தார்; பிரசங்கங்கள் செய்து பார்த்தார்; குருவாயூர் போன்ற விடங்கட்கு ஆளனுப்பிப் பார்த்தார், என்றாலும் காரியம் பலிப்பதாகக்காணோம்; அவருடைய ஆசைக்கு எதிரிடையாக உலகம் போய்க்கொண்டேயிருக்கிறது. எனவே எரிந்து விழுந்து தமது கோபமெல்லாம் தீர யாரைத் தாக்கலாமென்று பார்த்தார். அப்போது நல்ல வேளையாக லக்ஷ்மண சாஸ்திரி ஜோஷி என்பவர் அகப்பட்டார்.

* * *

அவரையும் தேகோபத்திரவம் செய்ய முடியுமா? செய்தால்தான் சங்கராசாரி என்ற பெருமை "சங்கரா சிவ சங்கரா"வாகிவிடுமே; ஆகவே கோபந்திர சாபம் போடத் தொடங்கினார் தாபம்கொண்ட அபாவசரீரி.

* * *

சாபமென்றால் எப்படி? அரை வீசை ஒரு வீசை, பத்து வீசை, இருபது வீசையா? இல்லை. டன் கணக்காகப் போடத்தொடங்கி விட்டார். இன்னும் கொஞ்சம் அழுத்திக்கூறினால் அவருடைய சாபத்தை அளக்க "டிக்ரி"யே கிடையாது. லக்ஷ்மண சாஸ்திரி நகரத்திற்கே போய்விட வேண்டுமென்று சபித்து விட்டார். அடடா! நகரத்தைவிடப் பயங்கரமானது எது! காரைக்குடிக் காயாங்குண்டோ, விருதுநகர் சாக்கடைகளின் காலைத்தோற்றமோ சிவங்கோவில் ஊருணிகளோ நிகராகுமா?

* * *

இந்த லக்ஷ்மண சாஸ்திரி என்பவர் யார், அவர் செய்த பாபமென்ன வென்றால் அதுதான் ரசமான கதை. இந்த சாஸ்திரிதான் ஸ்ரீ. சி. ராஜகோபாலசாரியாரின் புதல்வியான லக்ஷ்மி அவர்கட்கும் காந்திஜீ புதல்வரான தேவதாஸ் அவர்கட்கும் திருமணம் நடத்தி வைத்தவர். இவர் ஒரு பனியாவுக்கும் ஒரு ஐயங்கார் பெண்ணுக்கும் மணம் செய்து வைக்கலாமா? ஜாதி சாஸ்திர முறைப்படி இதைவிட அடாத செயலென்ன விருக்கிறது? இத்தகைய அநீதியை செய்தால் ஜகத்திற்கெல்லாம் குருவாகிய சங்கராசாரியார் எப்படிப் பொறுப்பார்? எனவே இலவச தண்டனை முறையாகிய "நரகிற்குப்போ" என்ற அஸ்திரத்தை எடுத்து வீசிவிட்டார். அவ்வஸ்திரத்தை விடுப்பதற்கு அவர் சொன்ன ஜட்ஜ்மெண்டு கடதாசியில் "நீர் காந்திஜீக்கு சரியானபடி தீண்டாமையைப் பற்றி எடுத்துச் சொல்லவில்லை; ஆகவே நரகிற்குப்போவீர்" என்று குறிப்பிட்டிருக்கிறார்.

* * *

ஸ்ரீ லக்ஷ்மண சாஸ்திரி இந்த அஸ்திரத்தைக் கண்டு ஓடிப் புதருக்குள் ஒளிக்கும் ஒரு வைதீகமிருக மல்ல. அவர் வெளியே வந்து தன் தைரியமாகிய எதிரம்பைவிட்டு ஆசாரியார் அஸ்திரத்தைக் கீழே தள்ளி விட்டு "சண்டைக்குத் தயார்; ஆள்வாகனமேறி வெளிவருக! உம் சாஸ்திரத்தை எடுத்துக்கொண்டுஎன்னை அடைக; சாஸ்திரம் எப்படி சொல்கிறது பார்ப்போம்" என்று பறை முழக்கினார். அதோடு அவர் விட்டாரா? வீரரல்லவா? ஒருவன் தடியைத்தூக்கி வீசினால் தடியை தடை செய்து விட்டால் மட்டிலும் போதுமா? எதிரியைப் பயப்படுத்தவாவது வேண்டாமா? ஆகவே ஸ்ரீ சாஸ்திரி "உம்மைப்போல பிறப்பினால் ஜாதிவித்தியாசம் பாராட்டுகிறவர்கள் சுவர்க்கத்திற்குச்சென்றால் அதுவும்கூட நகரமாகிவிடும்" என்று கடுதாசியனுப்பினர்.

* * *

இங்ஙனம் சாஸ்திர ஆயுதமுடைய ஒரு சங்கர ஆசாரியாரும் ஒரு சாஸ்திரியும் சண்டைக்கு முன்வந்திருக்கின்றார்கள். எந்தவிடத்தில், என்று, எத்தனை வகைப்படைகளுடன் போர் நிகழுமோ தெரியவில்லை. இருந்தாலும் நான் ஒன்று கேட்டுக் கொள்கிறேன். இவர்கள் சண்டைபோடுகிற சமாசாரம் இந்த இருபதாம் நூற்றாண்டில் வெளிநாட்டார் செவிகளுக்கு எட்டிவிடலாகாது. இவர்கள் சாஸ்திர மென்று சொல்வதையும், இவர்கள் அந்த சாஸ்திரத்தில் மறைந்திருக்கின்ற தென்று சொல்வதையும், அவ்வாறு மறைந்து கிடப்பதனால் ஒரு ஜாதியார் குப்புறக்கிடக்க வேண்டும், வேறொரு ஜாதியார் கொட்டாவிவிட வேண்டும், மூன்றாவதொரு ஜாதியார் உண்டு ஏப்பமிட வேண்டும், அடுத்த ஜாதியார் பாதி எழுந்திருக்கலாம்.........எல்லா ஜாதியாரும் தம்மைச் சுற்றி ஒரு கோடுகிழித்துக் கொண்டு அதற்குள் தான் இருக்க வேண்டும் என்றெல்லாம் சொல்வதையும் கேட்டார்களானால் "இந்தியர்கள் காட்டுமிராண்டி நிலைமையை விட்டு வெளிவரவில்லை; இன்னும் கூத்தாடத்தான்செய்கிறார்கள்" என்று சொல்லிவிடுவார்கள். அதோடுசினிமாவில் காண்பிக்கத்தொடங்கினாலும்தொடங்கிவிடலாம்.

* * *

ஆகவே சாஸ்திரப் படைதாரிகளே! கொஞ்சம் வாயையடக்குங்கள். சங்கராசாரிய சுவாமிகளே! சாபம்போடவேண்டாம். நீங்களே நரகிற்குப்போகிறீர்களோ; மோக்ஷத்திற்குப் போகிறீர்களோ; அதனை நன்கு தெரிந்துகொண்டு வார்த்தைகளைச் செலவிடுங்கள். வகைவகையான இயந்திரம் வந்த பிறகும் ஆள் மீதேறிச் செல்லும் உங்களை மோக்ஷத்திற்குப் போவார் என்று யாராவது கூறுவார்களா? ஒரு காளாவது உலகம் ஒப்பும் எந்த வழியிலும் உழைக்காது ராஜபோகம் அனுபவிக்கும் உங்களுக்கு மோக்ஷம் வருமென்று யாராவது சொல்வார்களா? எட்டுக்கோடிப் பேர்களை தீண்டாதார் என்றும் மனிதப் புழுக்கள் என்றும் சொல்லும் உங்களுக்கு மோக்ஷவாயிலாவது கிடைக்குமென்று யாராவது நினைப்பார்களா? உலகை யெல்லாம் யார்யாரோ ஆண்டும் புதுப்புது ஆட்சிகளுக்குப் போராடியும் புதுப்புது ஆளும் முறைகளைக்கண்டு பிடித்தும் வருகின்ற இந்தக்காலத்தில் இந்தியாவின் ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டு "நான் உலக குரு" என்று அன்று முதல் இன்று வரையிலும் பொய்சொல்லிக் கொண்டிருக்கும் உங்களுக்கு மோக்ஷம் கிடைக்குமென்று யாராவது சொல்வார்களா? உலகைத் திறந்துவிட்டதற் கறிகுறியான வேஷத்தைப் போட்டுக்கொண்டு மண்ணாசை பொன்னாசைகளால் பெருமூச்சுவிடும் உங்களுக்கு மோக்ஷம் வருமென்று பைத்தியக்காரர் கூடவும் எண்ணமாட்டார்கள். "கடவுளால் படைக்கப்பட்டு, கடவுளால் வளர்க்கப்பட்டு, கடவுளுலகில், கடவுள் சாதத்தைச் சாப்பிட்டு கடவுளுருவமாகவே இருக்கின்ற" மனிதனைத்தொடக்கூடவும் இசையாத உங்களுக்கு மோக்ஷம்வருமென்று யார்தான் சொல்வார்கள்?

* * *

அதிகம் வேண்டாம். உங்களுக்கு மோக்ஷம் வேண்டுமென்றால் தனியாக அதற்கான விஷயங்களைப் பார்த்து சீக்கிரம் புறப்பட்டு விடுங்கள். வீணாக காலப்போக்கிற் கியன்றபடி இயங்கும் மனிதர்களை மடியைப்பிடித் திழுக்க வேண்டாம். நீங்களும் உங்கள் சாஸ்திரமும் உங்கள் சீடர்களும் இந்தியாவில் செய்யும் தொல்லை கொஞ்சமல்ல. நீங்கள் ஏதோ நன்மை செய்வதாக நினைத்திருந்தால், அந்த நன்மை எங்களுக்கு வேண்டாமென்று அதனைப்பெறவேண்டியவர்களென்று நீங்கள் நினைக்கின்ற நாங்கள் சொல்கிறோம். மானமாக உங்கள் விஷயத்தைப் பாருங்கள். எந்தக் காந்தி எவனை எப்படி யாக்கினாலும் ஆக்கட்டும். "இல்லை, நான் பிரமாதமாக சாதிக்க சக்தியுடையவன்; ஆண்டவன் அருளிருக்கிறது" என்றால் நல்லது; இந்நிமிஷத்திலேயே இந்தியாவுக்கு சுயராஜ்யத்தை வாங்கித்தந்து, ஒவ்வொரு இந்தியனையும் கல்விமானாகவும், அறிவாளியாகவும் செல்வவானாகவு மாக்கி, வறுமை, நோய், சண்டை, பொறாமை முதலிய எல்லாவற்றையும் துரத்தித் தங்கள் சக்தியை மெய்ப்பியுங்கள் வீண் வார்த்தை வேண்டாம்".

